*Kumaraṉ*

*Āram 9, muttu 16*

*December 03, 1931*

Record no. 313

REG. NO. M. 1823.

16 பக்கங்கள்.

# குமரன்

வாரப்பதிப்பு.

ஆரம் ௯. | காரைக்குடி, பிரஜோற்பத்தி-ஹூ கார்த்திகை-மீ ௧௮-௨ வியாழக்கிழமை. | முத்து ௧௫.

## திரு. ராம்குமார்.



"MERCHANT OF VENICE" என்ற நாடகத்தில் ஷைலாக்காக நடிக்கிறார். (ராம்குமாரரைப்பற்றி யறிய, இப்பத்திரிகையின் 14-வது பக்கத்தையும் நவம்பர் 19-ந் தேதி குமரனையும் பார்க்க.)

## பாரத் இன்ஷியூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.

ஸ்தாபனம் 1896] [ஹெட் ஆபீஸ், லாகூர்.

1928 வருஷம் டிசம்பர் 31வ யுடன் முடிவான ஐந்து வருஷ புரிசோதனைக் கணக்கில் எதிர்பாராத ஆச்சரியமான லாபம்.

இதுவரை வேறு கம்பெனிகளால் அளிக்கப்படாத உயர்ந்த போனஸ்.

31-12-1923 கணக்கில் ரூபா5 ,96,000 மேல் திற்கு எண்டோமெண் ஜீவியகால பாலிசிக்கும் ஐந்து வருஷத்திற்கு அளித்த போனஸ் ரூ. 100.

31-12-1928 கணக்கில் லாபம் ரூ. 12,30,000-க்குமேல் ஐந்து வருஷத்திற்கு ஆயிரத்திற்கு ஜீவியகால பாலிசிக்குரூபா125. எண்டோமெண்டு பாலிசிக்கு ரூபா 105.

எல்லா சந்தாக்களும் மிகவும் குறைந்தவை!

கம்பெனியில் எதிர்பாராத அபிவிருத்திக்கு கீழ்கண்டவை அத்தாட்சி.

| | | |
|---|---|---|
| பண்டு .... .... .... | ரூ. | 1,20,00,000-க்குமேல் |
| இன்ஷியூரன்ஸிலிருக்கும் பாலிசி துகை | ரூ. | 6,00,00,000-க்குமேல் |
| இன்ஷியூர்செய்தவர்களுக்கு கொடுத்த துகை | | 70,00,000-க்குமேல் |
| வருஷாந்திர மொத்த வருமானம் | ரூ. | 31,00,000-க்குமேல் |

மற்ற விபரங்கட்கும் ஏஜன்சிக்கும் எழுதவும்:—

ஆர்கனைசர்கள்.

S. கேணேசன் கும்பகோணம்

G. ராமசாமி அய்யர் மதுரை.

கிளை:—

G. ரெங்கசாமி, மானேஜர்.

மதுரை சப் ஆபீஸ்.

---

கூழைரங்கன் விலை ரூபா 1.

நமது பலசரக்குக்கடை விலை அணா 10.

---

## பலமுள்ள வீரபுருடனாக,

குமரனாக, வாலிபத்தன்மையடைய ஆண் பெண் மனமொத்துவாழ, இல்லற இன்பம் அனுபவிக்க, புத்திர பாக்கியம்பெற வழியில்லையென வருந்துபவர்கள்

பழநி சி. எம். சாமி, மகாவீரீய

# தங்கபஸ்பம்

சாப்பிடுங்கள். தாதுபுஷ்டியில் மன்மதனுக் கொப்பாவீர் பந்தயம் போட்டு பரீக்ஷிக்கக்கூடிய மருந்து.

தாதுபுஷ்டியில் நிகரற்றது மகானருளால் கிடைக்கப்பெற்றது

வெள்ளை, வெட்டை, கடேப்பு, பவுத்திரம், மூலம், நீரழிவு க்ஷயம், இருமல், குன்மம் சூலை முதலிய சகல வியாதிகளும் நீங்கும்.

அழிந்துபோன ஆண்மையும், இழந்த பலத்தையும், இல்லற வாழ்வில் இன்பத்தையும் கொடுத்து, ஊக்கத்தையும் உற்சாகத்தை யும், தந்துதளர்ந்த நரம்புகளைக் கெட்டிப்படுத்தி, வியாதிகளை நீக்கி வாலிபனுக்கி சதா பரமானந்தத்தைக் கொடுக்கக்கூடிய அபூர்வசக்தி இதற்கிருப்பதால் இதன் அரிய குணத்தைக்கண்டு ஆச்சரியப்படாதவர்கள் ஒருவருமில்லை.

ஒருமுறை உபயோகித்தால் உண்மை விளங்கும்.

48 நாள் பஸ்பம் விலை ரூ, 20. 24 நாள் பஸ்பம் விலை ரூ 10

ஏராளமான நற்சாட்சிகளை கியாட்லாக்கில் பார்க்கவும்.

வைத்திய ஆசிரியர், சி. மலையப்பசாமி,

நித்தியானந்த வைத்தியசாலை, பழநி. S. I. R.

---

இரத்தமே உயிர்.

ஷண்முகானந்த வைத்தியசாலையின் இணையற்ற இரத்தவிர்த்தி மருந்து.

## சுவர்ண காந்தம்.

அயம், காந்தம், தங்கம், மண்டூரம் 5-ம் சேர்ந்தது

பாண்டு, சோகை, காமாலை, பித்தப்பாண்டு, விஷப்பாண்டு. சூதகபாண்டு, நீர்ப்பாண்டு, பித்தவெட்டை, ஜுரக்கட்டி, சூதகக்கட்டி, குன்மம், பித்தவாயு, மதுமேகம், க்ஷயம், காசம், கைவீக்கம், கால்வீக்கம், வயிறு வீக்கம், கிராணி, அதிசாரம், உஷ்ணவாயு, சூதகவாயு முதலிய அசாத்திய நோய்களும் ஆச்சரியப்படும்படி குணமாகி நல்ல இரத்தவிர்த்தியுண்டாகும்.

3-வார மருந்து ரூ. 10—8—0

மேகநீர் வியாதிக்கு ரஸ தாம்பரம் ரூ. 30—0—0

டாக்டர். கண்ணுசாமி, திருவாரூர்.

---

1932 வெளியாய்விட்டது 1932

"ஸ்ரீ வித்யா"

ஜெம், ஜென்ட்ஸ், பாக்கெட், பிஸினஸ், பாபுலர் & அபீஷியல்

## டைரிகள்

எல்லாவிடங்களிலும் கிடைக்கும்.

பப்ளிஷர்ஸ் :—ஸ்ரீவித்தியா பிரஸ், கும்பகோணம்.

---

## பான்ஸலேனு தளக்கற்கள்.

மிகக் குறைந்த விலையில் உறுதியானதும், தேயாததும், பாலிஷ் உள்ளதுமான கற்கள் இதுவே. சிகப்பு, மஞ்சள், கருப்பு நிறங்களில், ஆறுபட்டை சதுரம் முதலிய பல சைஸ்களில், பல டிஸைன்களில் போடலாம்.

ஸ்டாக்குகள் ஏராளமாய் இருக்கின்றன.

ராவல் அண்டு கம்பெனி,

கல்லுக்கட்டி, காரைக்குடி.

---

பி. எம். சி. லிங்கத்தின்

## சுவாச காச நிவாரணி.

கபம், இருமல், இளைப்பு, சீதளம், மார்ச்சளி, நெஞ்சுவலி, கஷ்ட சுவாசம், மூக்கடைப்பு, தொண்டையில் உண்டாகும் இரைச்சல் அடைப்பு, கரகரப்பு, எரிச்சல் வலி, புண், ஜலதோஷம், தும்மல், பீனிசம், வாயிலும் நாசியிலும் நீர்வடிதல், குழந்தைகள் மார்ச்சளி முதலியவைகளுக்கு உபயோகிக்கக்கூடியது.

மருந்து கிடைக்குமிடம்:- } விபரங்களுக்கெழுதவும். மருந்தின் விலை ரூ. 1-4-0
திருநாவுக்கரசு மெடிகல் ஹால்,

மதராஸ், சோல் ஏஜண்டு:— சேவ்வாய்பேட்டை, சேலம். S. I.

தாதா அண்டு கோ., 52, நைனியப்ப நாயக்கன் தெரு மதராஸ்.

---

குறைந்த சார்ஜ்! நல்ல தருணம்!!

## ஸ்டார் சித்திரசாலை.

கோத்தவால்சாவடி, திருச்சி.

நல்லபுரோமைட் என்லார்ஜ்மேண்டுகள் மிகவும் குறைந்தசார்ஜுசெய்யப்படும். 15''X12'' சயிஸ் கட்டமவுண்டுடன் வேலைமுடிந்தது ரூ. 15-0-0க்கு செய்தது இப்போது ரூ. 6-8-0. 23''X17'' சயிஸ் கட்மவுண்டுடன் வேலை முடிந்தது ரூ. 20-0-0க்கு செய்தது இப்போது ரூ. 10-0-0 ஆர்டருக்கு முந்துங்கள். போட்டோகாப்பியுடன் பாதிதுகை முன்பணம் அனுப்பவேண்டும். தபால்சிலவு வேறு.

---

அமிர்தாஞ்சனம்

எல்லா நோவுகளுக்கும் திவ்யாமிர்தம்

SOVEREIGN-REMEDY

AMRUTANJAN

Best Indian Pain Balm

வாரப் பதிப்பு.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 6-0-0

# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப் பதிப்பு.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 0-12-0
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு 1-0-0
வருஷம் ஆடிமீ ஆரம்பம்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

## பொறுக்கு மணிகள்.

இந்தியாவில் தொழிலாளர் சங்கம் முதன்முதல் சென்னையில்தான் ஸ்தாபிக்கப்பட்டதாம்.

0 0 0

நார்வேயில் ஆஸ்லா என்ற விடத்தில் 800 வருடங்கட்கு முன் கட்டப்பட்டிருக்கும் ஒரு பெரிய கிறிஸ்தவாலயத்தை, ஆணியே உபயோகிக்காமல் கட்டி முடித்திருக்கின்றனர்.

0 0 0

கி. மு. 200 ம் வருடமுதல் மேல் ஜோடுகள் உபயோகிக்கப்பட்டு வருகின்றனவாம். அவை கி. பி. 16 ம் நூற்றுண்டில்தான் முதன் முதல் இயந்திரத்தினுல் பின்னப்பட்டு வெளிவந்தனவாம்.

0 0 0

ஆப்ரிக்காவிலுள்ள பெர்பர் என்ற ஜாதியினர், தேனிலிருந்தும், வறுத்த தானியத்திலிருந்தும் ஒருவித பதமான உணவை தயாரிக்கின்றனர். அவ்வினிய பொருளில் ஒரு கைபிடி அளவு சாப்பிட்டு விட்டால், ஒருநாளைக்கு உணவின் தேவையே ஏற்படுவதில்லையாம்.

0 0 0

பாரிஸ் டாக்டர்கள், நோயாளிகளுக்கு ஆலோசனை கூற கிராமபோன் ரிகார்டுகள் தயாரித்திருக்கின்றனர். நோயாளிகளின் அசௌக்கியம் சிறிது குறைந்தவுடன் இந்த ரிகார்டுகள் அளிக்கப்படுகின்றன. இவை கூறும் விதம் சிகிச்சைகளை செய்துகொள்ள வேண்டும்.

0 0 0

அமெரிக்கா, வருடத்தில் 2,50,00,000 பவுன்களை கைபார்த்தல், குறி சொல்லுதல், மந்திரம் செய்தல் முதலிய விஷயங்களில் செலவிடுகிறது. நியுயார்க்கில் மட்டும் 50,00,000 பவுன்களும், சிகாகோவில் 24,00,000 பவுன்களும் செலவழிக்கப்படுகிறது. இதற்காக ஒரு பெரிய ஆபீசுமிருக்கின்றதாம்.

0 0 0

பாரிஸ் நகரத்தில், பதினுன்காவது லூயிஸ் அரசர் காலத்திலிருந்து ஒரு அதிசயமான பீரங்கி காப்பாற்றப்பட்டு வருகிறது. அதில் வெடிமருந்தை அடைத்து வைத்துவிட்டால், சூரிய உஷ்ணத்தினுதவியால் சரியாக பகல் 12 மணிக்கு வெடித்து மணியைக் குறிப்பிடுமாம். அதற்கு "சூரிய பீரங்கி" என்பது பெயர்.

0 0 0

சீனர்கள், பிரேதத்தை சுடுகாட்டிற்கு தூக்கிச் செல்லும்பொழுது வெள்ளைக் கோழியை முன்னால் ஒருவன் அது சப்தம் செய்துகொண்டேயிருக்கும்படி நசுக்கிக்கொண்டே செல்லுவான். அதனுல் இறந்துபோனவனின் ஆன்மா தைரியமாகச் செல்ல கோழியின் சப்தம் உதவி செய்யுமென அவர்கள் நம்புகின்றனர்.

பாரசீகத்தில் சியாகான் என்னும் 18 வயதுள்ள வாலிபர் ஒருவர் 12 அடி உயரமிருக்கிறாராம்.

0 0 0

ஆடவர்களின், முகத்தில் இடது பாகம் பெண்ணின் சாயலாகவும், பெண்களின் முகத்தில் இடது பாகவும் ஆடவனின் தோற்றத்துடனும் விளங்குகின்றனவாம்.

0 0 0

நியூயார்க்கில் மிஸ் பார்னிஸ் என்ற பெண் ஒரு புத்தகக்கடை வைத்து, "இருநூறு பவுன்களுக்குக் குறைந்த வியாபாரம் கவனிக்கப்படமாட்டா" தென ஒரு போர்டை தொங்கவிட்டு, வியாபாரம் நடத்தி வருகின்றுள். 199 பவுன் 19 ஷில்லிங்குக் புத்தகங்கள் வேண்டுமாயினும் கொடுக்கப்படுவதில்லை.

ஜப்பானில், தாகள் மூலமாக பெண்ணும், ஆணும் ஒரு டீகடையில் சந்தித்து விவாக நிச்சயார்த்தம் செய்து கொள்ளுகின்றனர். நிச்சயார்த்தத்திற்கு பெண் சம்மதித்துவிட்டால் ஒரு கோப்பையில் தேத்தண்ணீர் ஊற்றித் தருவாள்; அதை மாப்பிள்ளை பருகிவிட வேண்டும்.

0 0 0

இங்கிலாந்து முதலிய மேனுடுகளில் ஆண்களும், பெண்களும், வாசனைத் திரவியங்களை கைக்குட்டைகளிலும், ஆடைகளிலும் பூசி ஆனந்தித்துவந்தனர். ஆனுல் அவைகள் தடவின இடங்கள் கறைபட்டு விடுவதால், தற்போது மலர் போன்ற அழகிய விசிரிகளில் தடவி காற்றின் போக்கில் முகர்ந்து இன்புற்று வருகின்றனராம்.

## சந்யாசி சம்சாரியான கதை.

சாமியாருக்கு முகக்ஷவரம் நடக்கிறது.

ஆங்கில சிற்பிகள் மகாத்மாகாந்தியின் மார்பு வரையிலுமுள்ள உருவங்கள் இரண்டைச் செய்து முடித்திருக்கின்றுர்கள். அவற்றைப்பற்றி மகாத்மாவிடம் அபிப்பிராயம் கேட்டபோது அவர் ஒன்றும் கூறவில்லையாம்.

0 0 0

ஹங்கேரியா புடாபெஸ்ட் என்னுமிடத்தில், ஒரு பல்வைத்தியர் சரியான தங்கத்தைக்கொண்டு பல் கட்டவில்லை என ஒருவர் வழக்குத் தொடர்ந்திருந்தார். அவ்வழக்கில் பல் வைத்தியர், தமக்கு நேர்ந்திருக்கும் தங்கக் கஷ்டத்தைப் பற்றியும், உலகத்திலே தங்கம் கிடைப்பதரிதாக விருக்கிறதென்றும், அமெரிக்காவும், பிரான்சும் ஏராளமாக தங்கத்தை சேர்த்து மறைத்திருப்பதே இதற்கு காரணமெனவும் அதனுலேயே போலி தங்கத்தை உபயோகிக்க நேர்ந்ததென்றும் கூறினுர். முடிவில் பல் வைத்தியரே வெற்றி பெற்றுராம்.

அமெரிக்காவில் பிறந்த சீன மாதாகிய அன்னு-மே-வாங் என்கின்ற பெயர்போன சினிமா நடிகப்பெண் ஸ்டேஜில் முத்தம் கொடுக்க மறுக்கின்றுளாம். எனவே சினிமா உலகத்தில் அவளுக்கு வரக்கூடுமான புகழ் விளக்க முருமல் போகின்றது.

0 0 0

மெக்ஸிக்கோ நகரத்தில் ஓர் ஆகாய விமானி, விமானத்தில் ஏற்பட்ட பழுதினுல் ஒரு வீட்டின் கூரைமீது விழுந்துவிட்டார். அவரைக் காப்பாற்றுவதற்காகக் கூரைமீது ஏறிய சிலர் அவரை கைதவறி கீழே போட்டுவிட்டதால் அவர் உயிர் துறந்தார்.

0 0 0

புதிதாக விஷ வாயுவிலிருந்து தப்பித்துக்கொள்ளும் முறையை கண்டுபிடித்து அதற்காக ஒரு படையை சேர்த்திருக்கிறுர்கள். அதனை வருகிற கோளோன் காட்சியில் காட்டுவார்கள்.

## விகடத் துணுக்குகள்.

வேணு:—என்டா! நீலா!! நீ இப்படியே நாடோடியாகத்தான் சுற்றிக் கொண்டிருப்பாயா?

நீலன்:—அடே! அதை நீ "உலக ஆராய்ச்சி" செய்கிறுன் என்றபதத்தைப் போட்டுச்சொல்.

0 0 0

ரயில்வண்டியில் பிரயாணம் செய்துகொண்டிருந்த ஒரு குடியானவன், வண்டி ஒரு ஜங்ஷனில் வந்து நின்றதும்:—ஐயா! ஏன் இப்படி ஜனங்கள் பயந்து ஓடுகிறுர்கள்?

பிரயாணி:—அவர்கள் பயந்தோடவில்லை; அவரவர்கள் ஊருக்கும், வீட்டிற்கும்தான் செல்லுகிறுர்கள்.

குடியானவன்:—ஓ, ஹோ! சரி. எனக்குத்தான் பயமாருகிறதோ.

0 0 0

நாடகராஜா:—அடே, சேவகா! நான் சென்றுவருகிறேன்; வாயில், ஜாக்கிரதை.

சேவகன்:—அப்படியே மகாராஜ்! நான் வாய்க்குள் எது வந்தபோதிலும் விடமாட்டேன்.

0 0 0

சினிமாபெண்:— என்னைப்போல சோகரசத்தில் எவரும் நடித்திருக்கவே மாட்டார்கள்.

சினிமா அபிமானி:—நிஜமே; உன்னைப்போல் கஞ்சிக்கு வேறு யார் லாட்டரி போடுகிறுர்கள்?

0 0 0

இறக்கும் தருவாயிலிருக்கும் ஒருவனிடத்தில் ஒரு வைத்தியர் "ஐயா, கடைசியாகச்சொல்லுங்கள். உங்களுக்கு என்ன வேண்டும்."

நோயாளி:—நீ தொலைந்துவேறொரு வைத்தியர் வரவேண்டும்.

0 0 0

குழந்தை அழுதுகொண்டிருப்பதைக்கண்ட ஒரு தாய் ஓடிவந்து "உன்னை யார் அடித்தார்கள்"

குழந்தை:—அப்பா அடித்தார்.

தாய்:—ஏன்டித்தார்?

குழந்தை:—நான் அவரிடம் நீ நன்றுயில்லை; அம்மாவுக்குவேறொருமாப்பிள்ளை பார்க்கவேண்டுமென்று கூறினேன். அவர்கோபங்கொண்டு அடித்தார்.

0 0 0

'திவான் பகதூர் கருப்பன் செட்டியார் இறந்துபோனுர் தெரியுமா? அவருக்கு ஒன்றரைக்கோடிக்கிருக்கிறதாம்'

"நான் மிக மிக வருந்துகிறேன்"

"ஏன்; அவர் உன்னுடைய பந்துவல்லவே"

"ஆகையினுலேதான் அழுகிறேன்"

0 0 0

"என் தந்தை 105ல் இறந்தார்"

'அடே! நூற்றி ஐந்திலா இறந்தார்'

'ஆம், புதுச்சேரு நூற்றி ஐந்தில்'

0 0 0

சிகப்பி:—உங்கள்வீட்டில் தங்குகிறவர் யார்!

அலமி:—ஒரு, வழி காண்போர்.

சிகப்பி:—அப்படியா என்ன வழியைக் காண்கிறுர்?

அலமி:—ஒவ்வொரு மாதமும் வாடகைப்பணங்கேட்டால் தப்புவதற்கு வழியைக் காண்கிறுர்.

# அமெரிக்காவின் எதிர்காலம்.

(பரமசிவன்.)

உலகத்தில் பொருளாதாரப் புரட்சியொன்று நிச்சயமாக ஏற்பட்டே தீரும் என்பது மறுக்கமுடியாத உண்மை. இன்று நாம் கண்ணாரக் காணும் கோரக் காட்சிகள் அவ்வுண்மையை மெய்ப்பிக்கின்றன. ஒவ்வொரு தேசமும் "கிலப்பசி"யினால் நிலைகலங்கி நிற்கின்றது; எளியாரைவலியார் அடக்குதல்—ஆளுதல்—"நியாயம்" என்ற மந்திரத்தை மறவாது ஓதுகின்றன. செல்வத்தாலும், பலவலியாலும் உயர்வதே உண்மையான உயர்ச்சி என்று இன்றைய "நாகரிக தேசங்கள் கருத ஆரம்பித்தன. சட்டரீதியான கொள்ளை"யையொவ்வொரு ராஜாங்கமும் செய்ய ஆரம்பித்திருக்கின்றது. தேவைக்கு அதிகமான செல்வத்தைச் சேர்த்து வைப்பது பெரியதொரு "கடமை" எனக் கருதப்பட்டு வருகின்றது. இதனால் உலகில் ஒரு பகுதியாளர்கட்கு இன்றியமையாத தேவைகளைக் கூட பூர்த்தி செய்து கொள்ள இயலாததிலேயும், இன்னொரு பகுதியாளருக்கு தேவைக்கு மிக மிக அதிகமான வசதிப்பெருக்கும் நிறைந்து கிடக்கின்றன. இது மிகமிகக் கொடியதொரு விஷயமாகும். உணவின்றி முதுகுத்தோலும், வயிறும் ஒட்டிக்கொண்டு எழுந்திருப்பதற்கும் சக்தியற்ற நிலையில் காற்றை யுட்கொண்டு சிலர் வாழ்வதும், வயிறு வெடிக்கத்தின்று கள்ளாட்டுக் களியாட்டுகளில் காலங்கழித்து, கஷ்டமென்பதைக் கனவிலும் அறியாத நிலையில் பலர் வாழ்வதும் எந்த நியாயத்தில் சேர்ந்தது? மனிதர் உணவை மனிதர் பறிக்க எந்த மனிதனுக்குத்தான் உரிமையிருக்கின்றது? வித விதமான பண்டங்கள் பலப்பல செய்து கணக்கின்றி நீங்கள் உண்ணுவதைப் பசியால் மெலியும் ஏழைகள் பார்த்துக்கொண்டு நாக்கில் ஜலம் வடிய எட்டுணை நாட்கள் தான் நிற்பார். அவன் மேல் தாவிவிழுந்து அப்பொருளைப் பறித்து அந்த ஏழை பசியாறுவதில் என்ன பிழைதான் இருக்கின்றது? "நீ அளவுக்கு அதிகமாக உண்ண, நான் அளவுக்குக் குறைவாகக்கூட வசதியற்று ஏன் இருக்க வேண்டும்" என்று ஏழை கேட்பதில் குற்றமில்லை.

எனவே நிச்சயமாகப் பொருளாதாரப் புரட்சி ஏற்பட்டே தீரவேண்டும். இந்தப் புரட்சியின் முடிவையே எதிர்க்கால உலகத்தின் க்ஷேமம்தழுவி நிற்கின்றது. இன்று மனிதர் உணவை மனிதர் பறிப்பதற்கும், அளவுக்கு அதிகமாகப் பொருளை வைத்துக் கொண்டு உபயோகப்படாமல் பாழாக்கப் படுவதற்கும் உதவியாக உள்ள அரசியல் பொருளாதார தடங்கல்கள் நிச்சயமாகப் பாதிக்கப்படும். உலகத்தில் உள்ள மற்ற தேசங்கள் அனைத்திற்கும் ஒருங்கே உபயோகப்படக் கூடிய பஞ்சு அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஏராளமாக உற்பத்தியாகின்றன. ஒவ்வொரு நாடுகளின் அரசியல் பொருளாதாரத் தடங்கலினால் அவை பிற தேசத்தார்க்குப் பயன் படாமல் வீணாகின்றன. ஐக்கிய நாடுகளின் களஞ்சியங்களில் 500 கோடி புஷல் கோதுமை கேட்பாரின்றிச் சேமிக்கப்பட்டிருக்கின்றது. ஒரு புஷல்ஒரு ஷில்லிங் விலை யென்று விற்கப்படுகின்றது. சென்ற ஒரு நூற்றாண்டுக் கிடையில்இவ்வளவுமலிவான விலைக்கு நெல்விற்றதுகிடையாது. ஆனால் இக்குறைந்த விலைக்குக்கூட பிரேஸில் என்றஇடத்தில் உள்ளஜனங்கள் வாங்கசக்தியற்றுவிழிக்கின்றனர். பசியுற்று வருந்தும் கோடிக்கணக்கான மக்களைப்பெற்ற இந்தியாவும், சீனாவும் அரசியல் பொருளாதாரக் கட்டுப்பாடுகளினால் மலிந்துகிடக்கும் உணவுப்பொருளை வாங்க முடியவில்லை. பிரேஸில் என்ற இடமானது தனது திக்கற்ற நிலையில் என்ன செய்யப்போகின்றது! ஒரு ஷில்லிங் கொடுத்துக்கூட கோதுமை வாங்க முடியவில்லை. அதற்காக 1,05,000 மூட்டை காப்பிக்கொட்டை கொடுத்து 2 கோடி 50 லக்ஷம் புஷல் கோதுமை வாங்கப்போகின்றது. பருத்தி விதைப்பில் மூன்றிலொரு பாகத்தை அழித்துவிடுமாறு ஐக்கிய நாட்டு விவசாய போர்டார் அமெரிக்கா கவர்னர்களுக்கு உத்தரவிட்டிருக்கின்றனர். கோடிக்கணக்கான மக்கள் மலிவான பஞ்சையே வாங்கமுடியாத நிலையில் இருக்கின்றனர். கீழ் நாடுகளில் 4 கோடி பேல்களுக்கு அதிகமான பஞ்சு அமெரிக்காவில் வீணாக அழிக்கப்படப் போகின்றது.

ஐரோப்பாவின் வடபாகத்தில் டென்மார்க்கு முதலிய இடங்களில் மிதமிஞ்சிய வெண்ணை உற்பத்தியாகின்றது. ஆனால் ஜெர்மன் போன்ற இடங்களில் உள்ள கோடிக்கணக்கான மக்கள் தாழ்ந்ததரமான வெண்ணையையுபயோகிக்கின்றனர்.

இன்றுள்ள அரசியல்பொருளாதார நிலைகள் தேசங்களுக்கிடையில் ஒரு நேசபாவத்தை அன்னியோன்னிய முறையை உண்டாக்காமல் ஒன்றோடொன்று சம்பந்தமறச்செய்து விடுகின்றது. இத்தகைய தீமை தரத்தக்க சட்டதிட்டங்கள் அடியோடு மாறுதல் அவசியம்.

உலகத்திலுள்ள தங்கத்தில் முக்கால் பங்கு அமெரிக்காவிலும், பிரான்ஸிலும் குவிந்து கிடக்கின்றது. காரணம் என்ன? அரசியல் தடங்கல்கள்தான். தங்கத்திற்குப் பதிலாக ஏதாவது தேவையான பண்டங்களைக் கொடுத்துக் கடனைத்தீர்ப்பதற்கு அரசியல் அனுமதி இல்லை. ஒரு தேசத்துடன் மற்றொரு தேசம் வியாபாரம் செய்வதைத் தடுப்பதற்கானவை ஏற்றுமதி இறக்குமதித் தீர்வைகள், உப்புவரிகள்.

ஐரோப்பாக் கண்டமானது நாளுக்கு நாள் பயங்கரமான முறையில் கீழ் நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றது. முதலில் ஆஸ்டிரேலியா பொருளாதார நிலையிழந்தது. பிறகு ஜர்மனி நிறைகுன்றது. மூன்றாவதாக இங்கிலாந்து. அடுத்தது அமெரிக்கா. அமெரிக்காவும் சீக்கிரத்தில் இங்கிலாந்தைப்போன்று பொருளாதார நெருக்கடிக்கு ஆளாகி தங்கத்தை ஆதாரமாகக்கொண்ட டாலரைப்பறிக்க நேருமா என்று ராஜீய பொருளாதார நிபுணர் பலமாக யோசிக்கின்றனர். சென்ற சில வருஷங்களாக அமெரிக்காவில் டாலர்கள் தான் அதிகமாக சேகரிக்கப்பட்டிருந்தன. இதனால் செலாவணிக்குப் போதுமான தங்கம் இல்லாது போயிற்று. ஆனால் இப்பொழுது போதுமான தங்கம் சேமிக்கப்பட்டிருக்கின்றதெனினும் பொருளாதார நெருக்கடிக்குக் காரணங்கள் இல்லாமல் இல்லையென்று கூறப்படுகின்றது.

அமெரிக்காவில் 1500 பாங்கிகள் வரை முறிந்து விட்டதாகக் கூறப்படுகின்றது. இதனால் பாங்கி நடவடிக்கைகளில் ஜனங்களுக்கு நம்பிக்கை குறைந்து வருகின்றது. மேலும் அன்றைய நாட்டுத் தொகைகள் மீண்டும் திரும்ப வாங்கப்படுகின்றதாதலால் பலமான நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமாகின்றது.

மேலும் யுத்தக்கடன் சம்பந்தமான பிரச்சினை கவலைக்கிடமானதாக இருக்கின்றது. அந்த யுத்தக்கடனை அமெரிக்காரத்துச் செய்வதனால் உண்டாகும் பாதக சாதகங்களும் ரத்துச் செய்யாவிட்டால் உண்டாகும் பாதக சாதகங்களும் நுட்பமாக கவனிக்கப்பட வேண்டிய விஷயங்களாகும். நேச தேசங்களுக்கு யுத்தச் செலவின் பொருட்டுக் கடன் கொடுக்க அமெரிக்க சர்க்கார், அமெரிக்க ஜனங்களிடமிருந்து ஏறக்குறைய 450 கோடி பவுன் கடன் வாங்கியிருப்பதாகக் கணக்கெடுக்கப்பட்டிருக்கின்றது, இந்தத் தொகை முழுவதையும் ரத்துசெய்வதாயின் ஜனங்களுடைய சம்மதிதேவை. இன்றேல் அமெரிக்க அரசாங்கம் அத்தொகை முழுவதையும் ஜனங்களுக்குக்கொடுத்து விடுவதாக ஒப்புக்கொள்ளநேரும். அப்படி ஒப்புக்கொண்டால் மிகக் கடுமையான வரிவிதிப்பதையே வழியாகக்கொள்ள நேரும். இதனால் உள்நாட்டுக் கலகம் உண்டாகுமானால் என் செய்வது? ஜனங்களிடம் கடுமையான வரிவாங்கி அதையே கடனுக்காக அவர்களிடம் திருப்பிக் கொடுப்பதென்பது நியாயந்தானா?

மேலும் 1931ம் ஹு வரவு செலவு திட்டத்தில் 90கோடி டாலர்கள் துண்டு விழுந்திருக்கின்றது. நடைமுதல் வருஷத்தில் 150 கோடிவரை துண்டு விழக்கூடும் என்றெண்ணப் படுகின்றது. இந்தக் கடுமையான நிலைமையைச் சமாளிக்கச் சிக்கனத்தைத் தவிர வேறு வழியில்லை. சிக்கனமென்றால் சாதாரணமான சிக்கனமன்று; மிக மிகக் கடுமையான சிக்கனம் செய்தே தீரவேண்டும்.

உலகில் எங்கணுமே பெரிய வதந்தியொன்று உலாவிக்கொண்டிருக்கின்றது. அதாவது யுத்தக்கடன் முழுமையும் அமெரிக்க ரத்துச் செய்துவிடும் என்பதே. அது அவ்வாறு செய்யுமானால் கடன் சுமையினால் நசுங்கிக்கிடக்கும் தேசங்களை உயர்ந்தெழச் செய்த பெருமை அமெரிக்காவைச்சாரும் என்பதில் ஐயமில்லை. இவ்வாறு அமெரிக்கா செய்யுமா என்பதுதான் கேள்வி. அவ்வாறு செய்வதாகவே இருந்தாலும் இரகஸ்ய பகிரங்க உடன்படிக்கைகள் பலவற்றின் மூலம் பெரியதொரு பலத்தை அமெரிக்கா பெறுவதற்கு ஏது இல்லாமற் போகவில்லை. மேலும் உலக விவகாரங்களை நல்லெண்ணத்தோடு அமெரிக்காகவனித்து யுத்தங்களினால் உலகச் சீர்கேட்டினை நன்கு உணர்ந்திருக்கு மாயின் தனக்குப் பிறதேசத்தார் தரவேண்டிய யுத்தக்கடனை ரத்துசெய்வதன் மூலம்—பல கண்டிப்பான உடன்படிக்கைகளினால் உலக சமாதானத்தையே நிலை நிறுத்தக்கூடும் என்று எண்ண இடமிருக்கிறது. அமெரிக்கா இந்தச் சந்தர்ப்பத்தை மேற் கூறிய விஷயத்துக்காகப் பயன் படுத்துமா என்பது கவனிக்கப்பட வேண்டியதாகும்.







# சிறுகதைப்பகுதி.

(இ. சிவம்.)

## ஒற்றைக்கால் முத்தம்மாள்.

செட்டிமார் நாட்டில் மோட்டார் கார் மிககறுகாரைக்குடியே. ஒருவர் தமது நீண்டநாள் அனுபவத்தைக்கொண்டு, 'அவ்வூர் காரைக்குடியல்ல; காரே குடியென்பதாகும்' என்றார். எனக்கு செட்டிமார்நாட்டில்அவ்வளவாகப்பழக்கமில்லை. என்றாலும் நான் காரைக்குடியில் வந்து தங்கிய சில மாதங்களுக்குள் அங்கு தான் ஏராளமான கார்கள் இருக்கின்றனவென்பதை உணர்ந்துகொண்டேன்.

நான் ஏன் இதர பொருள்களை விட்டுவிட்டு, மோட்டாரை மட்டிலும் குறிப்பிடுகின்றேனென்றால் எனக்கு என்ன காரணம் பற்றியோ மோட்டாரில் சவாரி செய்வதிலும், சொந்தமாக ஒரு கார் வைத்துக்கொள்வதிலும் விருப்ப மிருந்தது. விருப்பம் மட்டிலுமிருந்தாற் போதுமா? ரூபாய் வேண்டுமல்லவா? அதற்காக நான் மூன்று வருடம் ஒன்பது மாதம் மிக மிகக் கடுமையாக உழைத்து முடிவில் கொஞ்சம் பணம் சம்பாதித்தேன். எங்களூர் ஜனங்கள் செட்டிமார் நாட்டில் சென்றால் பணத்தை வாரி வாரி எடுக்கலா மென்றும், செட்டியார்களை அணுகுவோர் ஆளாகிவிடுவார்களென்றும் சொல்வது வழக்கம். ஆனால் இக் கொள்கை ஒருக்கால் ராஜா ஸர் போன்றவர்களையடைந்தால் வரலாமோ என்னமோ? மற்றச் செட்டியார்களிடம்............ கண்டுகொண்டேன்.

அது எவ்வண்ணமேனுமாகட்டும். நான் மூன்று வருடம் ஒன்பது மாதம் கடுமையாக வேலை செய்த பிறகு கணக்குப்பார்த்ததில், ஐநூற்றி இருபத்தி ஒன்பது ரூபாய் தான் சம்பாதித்திருந்ததாகக் கண்டேன். என்னோடு நெருங்கிப் பழகிய சிலர் இதனை ஒரு பெரிய பாக்கியமாகப் புகழ்ந்தார்கள்; என்னை வியந்தார்கள். ஆனால் எனக்கு அது ஒரு வியப்பாகத் தோன்றவில்லை. ஏனெனில் அந்தத் தொகையில் ஒரு பெரும் பாகம், காரைக்குடி பொதுநல தொண்டர் சங்கத்தார் போட்ட லாட்டரியில் எனக்கு முதல் "பிரைஸ்" விழுந்ததால் கிடைத்ததாகும். இந்த இரகசியம் வெளியே பலருக்குத் தெரியாது. ஆதல் பற்றித்தான் என்னை "குடியானவர்களில்" ஒரு சிலர் புகழ்ந்தார்கள். நான் அதுவும் எனது யோக காலந்தான் என்று எண்ணிக்கொண்டு மௌனமாயிருந்து விட்டேன்.

இப்படிச் சம்பாதித்த பணத்தையெல்லாம் கொடுத்து எனது மோட்டார் வாங்குகிற ஆசையை நிறைவேற்றிக்கொண்டால் போதுமா? போதாது. நானும் என் மனைவி முத்தம்மாளும் பல நாட்களாக யோசித்தோம். அவளுக்கு எப்படியாவது மோட்டார் என்ற பெயருக்காவது ஒன்றை வாங்கினால் போதுமென்று தோற்றியது. எனக்கு 7 ஆயிரமும் 10 ஆயிரமும் கொடுத்து "பியூக்கும்" "ஏர்ஸ்கினும்" வாங்கி யோட்டுகின்ற செட்டியார்களுக்கிடையில் 500 ரூபாய்க்குக் குறைச்சலான தொகைக்கு ஒரு காரை வாங்கி யோட்டுவதென்றால் அது எவ்வளவு அருவருப்பாயிருக்கும்என்று எண்ணமுண்டாயிற்று. எனவேபல நாள் யோசித்த பிறகு 'நான் எப்படியாவது ஒருகாரைவாங்கிக்கொண்டுஓட்டலாம்' என்று துணிந்தேன். இந்த யோசனைக்கு மனைவி முத்தம்மாளு மிசைந்தாள். அன்று முதல் 300 ரூபாயும் எடுத்துக்கொண்டு காரவாங்கும் முயற்சியிலீடுபட்டேன். ஈடுபட்டு, காரைக்குடி, அரியக்குடி, பூங்குடி, ஆத்தங்குடி, முதலிய குடிகளிலும், தேனிப்பட்டி, கடியாபட்டி, கல்லுப்பட்டி, பிள்ளையார்பட்டி, ஆவினிப்பட்டி, முதலிய பட்டிகளிலும், சிறுவயல், சிராவயல், ஆராவயல், புதுவயல் முதலிய வயல்களிலும், பள்ளத்தூர் கண்டனூர் கோட்டையூர் அமராவதிபுதூர் தெச்சூர் வெற்றியூர் முதலிய ஊர்களிலும் இன்னும் சில கோட்டைகளிலும் போய்ப் சுற்றிச் சுற்றிப் பார்த்தேன். ஓரிடத்திலாவது 300 ரூபாய்க்கு முழுமையான ஒரு மோட்டார் கிடைக்கவில்லை. ஓரிடத்தில் அத்தொகைக்கு ஒரு கார்தருவதாகச் சொன்னார்கள். ஆனால் அதற்கு ஷஷ்டியப்தபூர்த்தி நடந்து 6 வருடமானாற்போல தோன்றியது. நாட்டரசன் கோட்டையில் ஒரு காரைப்பார்த்து அதனை வாங்க வொருவாறு சம்மதப்பட்டேன். ஆனால் அதற்குச்சமீபத்தில் "டயமண்டு ஜூபிலி" நடத்தப்போகிறார்களாம். அப்பால் கல்லல் சிதம்பரம் செட்டியார் வீட்டில் ஒரு காரைப் பார்த்தேன்; அதை இருநூற்றி முப்பதுக்குத் தருவதாகக் கூறினார். ஆனால் அதைப் பார்த்துக் கொண்டிருந்தபோதேயொருவர் அண்மையில் நின்று "இவர்காராவாங்கவந்திருக்கிறார்? அழகழகு. இந்த காரிலேறி சவாரிசெய்யப் போகிறாரோ?" என்று கூறி ஏளனம் செய்து நகைத்தார். எனக்கு அளவிடமுடியாத நாணத்தைக் கொடுத்தது. உடனே நான் சற்று நிதானித்து "நான் எஞ்சினீயரிங் தேர்ந்தவன் ஐயா! பழைய கார்களை வாங்கி செப்பனிடுகிறவன். விஷயம் புரியாது இளிக்கிறீரே" என்று கோபத்தோடு கூறினேன். எப்படியாவது காரைத் தள்ளிவிடவேண்டுமென்று எண்ணிய சிதம்பரம் செட்டியார் அவன் மீது சீறிவிழுந்து "என்னடா மட்டிப்பயலே! பல்லைக்காட்டுகிறாயே! யார் எப்படிப் போனாலென்ன? உனக்கு இங்கென்ன வேலை! போவேன்" என்று தொடங்கி வீராசத்தில் முக்கால் மணிநேரம் ஒரே கோர்வையாக சொன்மாரிமொழிந்தார். அதில் நான் இந்த நாட்டில் கேட்ட "திட்டு" முழுது மிருந்தன. அவற்றைக் கேட்க எனக்கே பயமாக விருந்தது. ஆதலால்செட்டியார்பேச்சை முடிப்பதற்குள் நான் மெல்ல நழுவியோடி விட்டேன்.

இங்ஙனம் கார் பார்க்கப் போனதில் சுமார் 52 ரூபாய்க்கு மேல் செலவாயிற்று. எனவே இந்த அநாவசியச் செலவை நிறுத்திவிட்டு காரைக்குடியிலேயே இனி காரைப் பார்க்கவேண்டு மென்று தீர்மானித்தேன். அப்போது என் மனைவி சொக்கலிங்கம் செட்டியாரென்ற ஒருவர் வீட்டு மாட்டுக்கொட்டிலில் ஒரு கார் கிடப்பதாகக் கூறினாள். நான் சென்று பார்த்தேன். ஒருவாறு எனக்கு இசைந்தது. அது முதல் மேற்படி செட்டியாரைக்கண்டு "ஏன்; சுகமா" போட்டு நாலைந்து நாளைக்குள் நல்ல சினேகம் சம்பாதித்து விட்டேன். கடைசியாக என்னுடைய விருப்பத்தைத் தெரிவித்தபோது அதர் காரைத் தருவதாகச் சொன்னார். ஆகவே காருக்கு விலை பேசினோம். செட்டியார் சக்கரம், பாடி, ஸ்பிரிங், சீட்டுகள், டாப், ரேடியேட்டர், பிரேக், விசிரி, சிலிண்டர், பிஸ்டன் முதலிய ஒவ்வொன்றிற்கும் தனித் தனியே விலைபோட்டு ஒவ்வொரு நட்டுக்கும், ஆணிக்கும், பலகைக்கும் கிரயம் கூறி, கடைசியில் 479 ரூ. 5அணா 8பைசா சொன்னார். இதனைக்கேட்டபோது எனக்கு வியப்பொரு பக்கமும் நகைப்பொரு பக்கமும் வந்தன. கொஞ்சநேரம் சிரித்துவிட்டு இதென்ன இப்படிச் சொல்லுகிறீர்கள்? கொஞ்சம் குறைத்துச் சொல்லுங்கள் என்றேன். அவர் நீண்ட நேரம் கடிதத்தில் எழுதி யெழுதிக் கணக்குப்பார்த்துவிட்டு முடிவில் 5அணா 8பைசாவையும் குறைத்தார். அது எனக்கு இன்னு மதிகமான நகைப்பைக் கொடுத்தது.

பின் இரண்டுநாளாக அங்கு மிங்கு நடந்து அவரோடு பல "டிரைவர்"களைக் கொண்டு பேசச்சொல்ல இறுதியாக 359க்கு சம்மதித்தார். சம்மதித்ததும் நான் அதனை யோட்டிப்பார்க்க வேண்டுமென்றேன். அவர் இசைந்தார். உடன் எனது நண்பனாகிய ராமையா என்ற டிரைவரைக் கூட்டிக்கொண்டு வந்தேன். செட்டியார் 23 மாதங்களுக்கு முன் வாங்கிய பெட்ரோலில் கொஞ்சம் கொடுத்தார். அதனை காரில்விட்டு ராமய்யா "ஸ்டார்டு" செய்தான். ஸ்டார்ட்டர் சரியாயில்லை. ஆகவே காரை நானும் வேறொருவனுமாக தள்ளினோம். தள்ளத் தள்ள கார் போய்க்கொண்டேயிருந்தது; ஸ்டார்ட்டு செய்யவில்லை. முக்கால் மைல் போனதும் செட்டியார் ஓடிவந்து "என்னடா, ரூபாயை தாராமல் காரைக்கொண்டு போகிறாய்" என்றார்.

நான்:—காரை நான் கொண்டு போகவில்லை. ஸ்டார்டு செய்கிறேன்.

செட்டியார்:— அதற்காகவா முக்கால் மைல். தள்ளுகின்றனல்.

என்றார். நான் பின்னுடித்தள்ளினேன். பின்னுடி ½ மயில் தள்ளியதும் ஸ்டார்ட்டாகிற்று. எனக்கு அப்போதுதான் வந்தது சந்தோஷம். செட்டியாருக்கும் மனங்குளிர்ந்தது. டிரைவர் "கிளச்சை மிதித்து (?) காரை முன்னால் ஓட்டினான். கார் முன்னுடிப் போவதற்குப் பதிலாக பின்னுடிச்சென்றது. செட்டியார் 'அடே! அடே! எங்கடா கொண்டு போகிறாய்? முன்னுடி விடு" என்றார். டிரைவர் கற்றபடியெல்லாம் செய்தான். அது பின்னுடித்தான் சென்றது. உடனே நான் காரை பின் புறத்துக்குத்தள்ளி ஸ்டார்ட்டு செய்ததால் தான் இப்படிப் போகிறது போலும் என்றெண்ணி கொஞ்ச நேரத்திற்குள் அதை மாட்டுக் கொட்டிலில்கொண்டு நிறுத்தி விட்டுப் போனேன்.

மறுநாள் காலையில் செட்டியாரிடம் வாக்களித்தது போல் நான் ரூபாயும் கொண்டு சென்றேன். அப்போது ரூபாய் முழுவதும் என் கையிலில்லை. 59 ரூபாய் குறைவாயிருந்தது. அதனை ஒரு வாரத்துக்குள் தருவதாக வாக்குக் கூறினேன். செட்டியார் அதற்குக் கொஞ்சநேரம்மௌனமாயிருந்துவிட்டு காருக்கு மாலையில் வரச்சொன்னார். நான் மாலையில் மேற்படி ராமய்யாவோடுவந்து காரை வெளியே இறக்கி ஒரு மயில்தூரம் அதாவது—புதிய சந்தைப்பேட்டைக்கு சமீப மிருக்கும் என் வீடுவரைக்கும் தள்ளினேன். கார்ஸ்டார்ட்டாகவே யில்லை. முன்னாலும் பின்னாலும் மாறி மாறி பலதடவை தள்ளினேன். கார்ஸ்டார்ட்டாக வில்லை. கடைசியில் கைசோர்ந்து "எப்படியாவது ஆகட்டும்; நாளைக்காலையில் பார்ப்போ" மென்று துணிந்து கையால் தள்ளியே வீட்டுக்குக் கொண்டு வந்தேன்.

ஆ! எவ்வளவு சந்தோஷம் என் மனைவிக்கு. நாங்கள் வெகுதூரத்தில் காரைக் கொண்டுவரும் போதே வீட்டுவாசலில் நின்று ஆனந்தக் கூத்தாடினாள். ஏதோ ஒரு புஷ்பகவிமானம் வருவது போல எண்ணி சந்தோஷ பரவசமானாள். குழந்தையைக் கையில் வைத்துக் கொண்டு "சுந்தரம்! அதோபார் நமது மோட்டாரை. அப்பா தள்ளிக்கொண்டு வருகிறார், பார். கூப்பிடு அவரை" என்றாள். எனக்கும் உண்மையில் சந்தோஷமே. கிடைக்கமுடியாத ஒரு பொக்கிஷத்தை நானடைந்துவிட்டதாக நினைத்தேன். மோட்டார் பழயதாயிருந்தாலும் எனக்கு அதனிடம அளவு கடந்த காதலிருந்தது.

0 0 0

ஏன் அதிகம்? கார் வீட்டையடைந்ததும் மனைவி யோடிவந்து அதனை ஒவ்வொருபாகமாகத் தொட்டுத் தொட்டுப் பார்த்தாள். எங்கள் கார் நல்ல கழுதை நிறம். நீண்டநாளாக மாட்டுக் கொட்டிலில் கிடந்ததால் அப்போது நிறம் மங்கியிருந்தது. எனவே மனைவி அதனைத் துடைத்து எண்ணெய் போட்டால் நன்றாயிருக்குமென்று யோசனை சொன்னாள். எனக்கு மது சரியென்று தோன்றியதால் இசைந்தேன். உடனே அவள் ஒரு விளக்குமாறும் ஒரு போத்தலில் விளக்கெண்ணெயும் கொண்டுவந்தாள். என் மனைவி ஸ்நானத்துக்கு உபயோகிப்பது விளக்கெண்ணெய் தான். ஆதலால் அதனுடைய குணம் முழுதும் அவளுக்கு நன்கு தெரியும். அவள் காரை துடைப்பதால் நன்றாய் கூட்டி விளக்கெண்ணெயைத் தடவினாள். நானும் உதவிசெய்தேன். சுமார் 7-க்குத் தொடங்கிய வேலை 10-க்கு முடிந்தது. அதாவது 10 மணியோடு மோட்டாருக்கு விளக்கெண்ணெய் ஸ்நானம் முடிந்தது. அதன்மேல் படுக்கைக்குப் போனோம். போனது படுக்கைக்கானாலும் உறக்கம்வரவேயில்லை. மனைவி பலதடவை வெளியே வந்து காரைப்பார்த்துப் விட்டுப்போனாள். யாரேனும் திருடிவிட்டுப் போனாலென் செய்வது?

0 0 0

நான் காலையில் மோட்டார் மெக்கானிக் அச்சுதமேனோன் என்ற மலையாளியை அழைத்து என்கார் முன்னால் தள்ளினாலும் பின்னால் தள்ளினாலும் ஓடவில்லையென்றுப் பார்க்கச் சொன்னேன். அவன் இரண்டுமணி நேரம் பார்த்தான். பிறகு காரில் "மாக்னட்டோ" இல்லையென்று கூறினான். எனக்கு வியப்புப் பொறுக்க முடியவில்லை. செட்டியாரிடமிருக்கும் போது கார் ஓடிற்று; இப்போது மாக்னட்டோவில்லையாம். உடனே சொக்கலிங்கம் செட்டியாரிடம் ஓடிவந்து விஷயத்தைக்கூறினேன். அவர் "ஆமய்யா! நீங்கள் தான் ரூ. 59 தரவில்லையே. அதற்காக அதனை எடுத்துக் கொண்டேன். ரூபாய் தாராமல் காரை யோடவிடுவேனா?" என்றார்.

நான்:—என்ன சார்! நான் ஒரு வாரத்தில் தருவதாக கூறினேன்; நீங்களும் சம்மதித்தீர்கள். எல்லாமானபிறகு மாக்னட்டோவைப் பார்த்துக் கழற்றிக்கொண்டீர்களே.

என்றேன். இப்பேச்சு அதிகரித்து நான் அவரை நாயென்ன, அவர் நான் தான் நாயென்ன, அப்படியானால் நான் கடிப்பேனென்று சொல்ல உடனே அவர் "நான் தான் நாய்; உன்னை கடிப்பேன்" என்று சொல்ல சண்டைபிரமாதமாயிற்று. அப்போது பழனியப்ப செட்டியாரென்பவர் இடைப்பட்டு தாம் ரூபாய் தருவதாகக் கூறி பிணை நின்றார். அதன்மேல் நாய்ப்பேச்சு நின்று மாக்னட்டோ வெளிக்கிளம்பியது. அதனைக்கொண்டு காரில் வைத்ததும் காருக்கு உயிர் வந்துவிட்டது. (அது இயங்கத்தொடங்கியது.) அப்போது தான் மனைவி முத்தம்மாள் உண்மையான ஆனந்தம் கொண்டாள். நான் மெக்கானிக் மேனனுக்கு ரூ. 10 கொடுத்தேன். அவர்கார் முன்னுக்கே ஓடும்படியாகச்செ

(12-ம் பக்கம் பார்க்க.)

# இந்தியச் செய்திகள்.

இந்தியாவிள்ளஹோமியோபதிடாக்டர்களுடைய ஒரு மகாநாடு, கயாவில் டிசம்பர் 24 முதல் 28 வரையிலும் நடைபெறும்.

0 0 0

ஸர் மால்கோம் ஹெய்லி அவர்கள், லக்னோவிலுள்ள சென்டர் சப்டெல் ஹியையும், ஐக்கிய மாகாணங்களின் விமான நிலயத்தையும் திறந்து வைத்தார்.

0 0 0

ஸ்ரீமதி கிகிதேவி என்ற டெல்லி காங்கிரஸ் ஊழியர் ஒருவர் ராஜத்துரோகமான பாட்டொன்றைப் பாடியதற்காக ஜாமீன் கட்டும்படி உத்தரவிடப்பட்டாளாம்.

0 0 0

இந்தூர் தேசத்தில் சில வருடங்கட்கு முன்பு மந்திரியாக விருந்த ஷாம் சுந்தர் லால் என்பவர் இறந்து ஒரு மணி நேரமானதும் அவருடைய மனைவியும் உயிர் துறந்தாராம்.

0 0 0

அகில இந்தியக் கள்ள நாணய முயற்சியொன்றைப் போலீசார் கண்டுபிடித்திருப்பதாகவும் அது சம்பந்தமாக 54 பேர்களை (அவர்களில் பெரும்பாலோர் முஸ்லிம்களாம்) அலாகாபாத் சிறைக்கு அனுப்பியிருப்பதாகவும் தெரிகிறது.

0 0 0

சென்னை மைலாப்பூர் கடைகளிலிருந்தும், பற்றும்பல கடைகளிலிருந்தும் கள்ள ஒரு ரூபாய் நாணயங்களை போலீசார் கைப்பற்றினர். இவைகள் கோவிந்தாச்சாரி, குப்பு ஆச்சாரி என்ற இருவர்களால் மாற்றப்பட்டதாகதெரிந்து அவ்விருவரையும் கைது செய்திருக்கின்றனர்.

0 0 0

மத்திய மராத்தி மாகாண காங்கிரஸ் கமிட்டியின் கூட்டம் பாரிஸ்டர் திரு. எம். வி. அபயங்கர் தலைமையில் நடைபெற்றது. அகில்பூரி காங்கிரஸ் தலைவர் பதவிக்கு பாபுராஜேந்திர பிரசாத், திரு. சி. ராஜகோபாலாச்சாரியார், சுபாஷசந்திர போஷ், டாக்டர் அன்சாரி, கான் அப்துல்கபார்கான் ஆகியவர் களுடையவரை சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது.

0 0 0

சேலம் பப்ளிக் பிராஸிக்யூட்டர் டி. எஸ் ஜெகராஜ் அவர்களின் உத்தியோககாலம் இன்னும் 3 வருட காலத்திற்கு நீடித்து வைக்கப்பட்டிருக்கிறது. உதவி பப்ளிக் பிராசிக்யூடர் ஆர். வி. வி. தாத்தாச்சாரியின் உத்தியோக காலம் முடிந்து விட்டதால், அந்தஸ்தானத்திற்கு திரு. எம். விஜயராகவாச்சாரியார் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

0 0 0

ஹூப்ளி, நெசவுத்தொழிலாளர் சங்கத்தின் ஆதரவில் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில்,"தொழிலாளிகளுக்கு தற்போது ஏற்பட்டிருக்கும் கஷ்டத்தை நிவர்த்தித்து, போதிய சம்பளம் கொடுக்க மில் நிர்வாகிகள் உடனே முன்வராவிடில் தொழிலாளர் உசிதமான முறைகளை அனுஷ்டிக்க நேரிடும்'' என எச்சரிக்கை செய்வதாக ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி யிருக்கின்றனர்.

0 0 0

அலகாபாத்தில் தற்போது ஒரு பெரிய 'கள்ள நாணய' வழக்கொன்று நடந்துவருகிறது. இதில் எதிரிகள் 54 பேர்; இதில் பெரும்பாலோர் முஸ்லிம்கள். இந்தியா முழுவதிலும் அவர்களின் தொழில் நடந்துவந்ததாக சொல்லப்படுகிறது. இவ்வழக்கில் 500 சாக்ஷிகள் வரை விசாரிக்கப்படுமெனத் தெரிகிறது. எதிரிகளில், ஹைகோர்ட்டு குமாஸ்தா ஒருவரும், சப் இன்ஸ்பெக்டர் குமாரரொருவரும் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள்.

0 0 0

கல்கத்தாவிலிருந்து வெளிவரும் "லோகமான்யா'' என்ற வாரப்பத்திரிகையில் வெளியான "மலேரியோன்ற கொசுக்கு சபல்கள்'' என்னும் வியாசத்திற்காகவும், "சுதந்தரபாரதி'' என்ற ஹிந்தி வாரப்பத்திரிகையில் வெளியான "சுயராஜ்யம் அடைந்தே தீருவோம்'' என்ற வியாசத்திற்காகவும் அவ்விரு பத்திராதிபர்கள் மீதும் மாகாண மாஜிஸ்திரேட்டிடம் ராஜநிந்தனை குற்றத்திற்காக வழக்கு தொடரப்பட்டிருக்கிறது.

கடப்பை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் மாஜி தலைவர் திரு. கே. சுப்பிரமணியம் நவ. 23-ல் வேலூர் சிறையிலிருந்து விடுதலையடைந்தார்.

0 0 0

திரு. பிரதுல் கங்குலி, திரு. சுரேன் கோஷ் முதலிய 6 ஆள் தூக்கி சட்டக்கைதிகளை பக்ஸார் முகாமிலிருந்து சென்னை மகாணத்திற்கு மாற்றியிருக்கின்றனர்.

0 0 0

வாடம்பள்ளிதேரில் தேசியக்கொடியேற்றியது சம்பந்தமாக நடை பெற்ற கலக வழக்கில், கிழக்கோதாவரி செஷன்ஸ் ஜட்ஜ், எதிரிகளனைவரையும் விடுதலை செய்து விட்டார்.

0 0 0

ஹஸாரா பயோனியர் படையைச் சேர்ந்த 2 சிப்பாய்களுடைய சவம் கபாத்மை தானத்தில் காணப்பட்டது. இதே படையைச் சேர்ந்த 10 சிப்பாய்கள் இது சம்பந்தமாக கைது செய்யப்பட்டனர்.

0 0 0

கொச்சி மகாராஜா, தமது மனைவியாருடனும் மற்ற பரிவாரங்களுடனும் தேக அசௌக்கியத்தை முன்னிட்டு சிகிச்சை பெற சென்னைக்கு வந்திருக்கிறார். மகாராஜா சென்னையில் ஒரு மாதம் வரை தங்கியிருப்பாரெனத் தெரிகிறது.

0 0 0

திருமல்சேரி சார்ஜெண்ட் ஸ்டீவன்சன் தன்னுடைய கைத்துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு மரணமடைந்தார். அவருக்கு வயது 29. கலியாணமாகாதவர். கொலையின் காரணம் தெரியவில்லை. போலீஸ் விசாரணை நடந்து வருகிறது.

0 0 0

நீண்டகாலமாக தென் இந்திய ரயில்வேயில் தொழில் பார்த்தவரும், சீப் ட்ரான்ஸ்போர்ட்டேஷன் சூபரின்டெண்டாக விருந்தவருமான மிஸ்டர் சி. எஸ். ரௌபாதம் அவர்கள் நோய்வாய்ப்பட்டு மரணமடைந்ததை முன்னிட்டு, மரியாதைக்குறிகுறியாக திருச்சி ரயில்வே ஆபீஸ்கள் நவ. 24ந்தேதி மூடப்பட்டன.

0 0 0

செம்பியம் கள்ளுக்கடை மறியல் வழக்கில், சப்மாஜிஸ்திரேட்டின் தீர்ப்பை ஆட்சேபித்து, நவ. 27ந்தேதி எதிரிகள் சைதாப்பேட்டை சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட்டிடம் அப்பீல் செய்துகொண்டனர். மாஜிஸ்திரேட் அப்பீலை ஏற்றுக்கொண்டு அபராதத்தொகை வசூலை டிசம்பர் 6ந்தேதிவரை நிறுத்திவைக்கும்படி போலீசாருக்கு உத்தரவிட்டார். அப்பீல் டிச. 6ந்தேதி முடிவு செய்யப்படும்.

0 0 0

சென்னை கவர்ன்மெண்டின் ரெவின்யூ மெம்பர் கனம் காம்பெல் டிசம்பர் மாதம் முதல் தேதி சென்னையை விட்டுப் புறப்பட்டு கிருஷ்ணா, கோதாவரி ஜில்லாக்களில் சுற்றுப்பிரயாணம் செய்வார். அவரை நேரிலோ அன்றி தூது மூலமாகவோ கண்டுபேச விரும்புவோர் அந்தந்த ஜில்லா கலெக்டர் மூலம் அறிவித்துக் கொள்ள வேண்டும்.

0 0 0

சாயாசன்னின் முக்கிய ஆட்களாயிருந்த 5 பேர் மீதும் நடந்த வழக்கில், தாராவாடி செஷன்ஸ் கோர்ட்டில் 2 பர்மியர்களுக்கு ஜன்ம தண்டனை விதித்தனர். மற்ற மூவரை ஷான் சமஸ்தானத்தில் விசாரணை செய்து ஒருவருக்கு 10 வருஷக்கடுங்காவலும், 2 வது எதிரிக்கு 7 வருஷமும், 3வது எதிரியான சாயாசென்னின் தளபதியான மூன்ஷேலாவுக்கு ஜன்மதண்டனையும் விதித்தனர்.

0 0 0

கோயம்புத்தூர் ஜில்லா புளியம்பாளையம் கிராமத்தைச் சேர்ந்த சின்னக் கவுண்டன் என்பவன் சென்ற ஆகஸ்டு 22-ந்தேதி யன்று, தனது மனைவி மாரக்காள் என்பவளை, நெஞ்சைப் பிடித்து உயிர்போகும்வரை அழுத்தியதாகவும், பின்னர் பிரேதத்தைக் கூரையின் சட்டத்தில் கட்டி தொங்கவிட்டதாகவும் குற்றம் சாட்டப்பட்டு நடந்த வழக்கில் கோயம்புத்தூர் அடிஷனல் செஷன்ஸ் ஜட்ஜ், அசெசர்களின் அபிப்பிராயத்தை அனுசரித்து எதிரி குற்றவாளியல்லவென்று விடுதலை செய்து விட்டார்.

கல்கத்தாவில். நவ. 25 ந்தேதி யன்று போலீசார் "தேசான்த் பலீல் சங்கா சமதி''யில் சோதனையிட்டு சுதேசி காட்சியில் வைத்த சிலதஸ்தா வேஜிகளை பறிமுதல் செய்தனர்.

0 0 0

சென்றவாரம், திருவாய்கூரைச் சேர்ந்த குன்னருதாரம் கிராமத்தில், பள்ளிக்கூட உபாத்தியாயரொருவர் தம்மனைவியையும், குழந்தையையும் கொலை செய்து விட்டாராம். போலீசார் உபாத்தியாயரை கைது செய்திருக்கின்றனர்.

0 0 0

காஷ்மீர் கலவரத்தை யொட்டி கைதியான 5,000 லைதிகள் 6 மாதம் முதல் 2 வருடம்வரை கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டு சமீபத்தில் பாஞ்சால சிறைக்கு மாற்றப்பட்டனர். அத்தண்டனைகளை மகாராஜா 3 மாதமாக குறைத்து விட்டார்.

0 0 0

தரை மார்க்கமாகவோ, கடல் மார்க்கமாகவோ, ஆகாய மார்க்கமாகவோ வங்காளத்திற்குள் வரும் ராஜ துவேஷமான புத்தகங்கள், பத்திரிகைகள் அல்லது தஸ்தாவேஜிகள் முதலியவைகளைத் தடுக்க, பிரதம மாகாண மாஜிஸ்திரேட்களுக்கும், ஜில்லா மாஜிஸ்திரேட்டுகளுக்கும் புதிய அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறதாம்.

0 0 0

கூடலூர் செண்ட்ரல் ஜெயில் பணப்பெட்டியிலிருந்து ரூ. 800 காணவில்லை. பெட்டியோ பத்திரமாக பூட்டித்தானிருந்ததாம். இத்தொகை கண்டிராக்டர்கள் டிபாஸிட் கட்டியிருப்பதாக கணக்கிலிருக்கிறதாம். இதைப்பற்றி போலீஸ் சூப்பரிண்டெண்டு புலன் விசாரித்து வருகிறார்.

0 0 0

பம்பாய் ஆக்டிங் கவர்னர் சர், எட்னஸ் ட்ஹாட்சனை சுட்டுக்கொல்ல முயற்சித்ததாக 8 வருடம் கடுங்காவல் தண்டனையடைந்த மாணவர் வசுதேவ பலவந்த கோகேட், அத்தண்டனையை ஆட்சேபித்து ஹைகோர்ட்டில் கொடுத்த அப்பீலை ஏற்றுக்கொண்டனர்.

0 0 0

ரங்கூனில், நுக்குவே என்ற சீனனொருவன், அதே வீட்டில் குடியிருந்த மற்றொரு சீனனின் பர்மிய மனைவியை அதிகாலையில் அவள் தனியே படுத்திருந்த போது, கொசுவலைக்குள் நுழைந்து அவளைக் கட்டித்தழுவியதாக நடந்த வழக்கில் இரண்டாது உதவி மாஜிஸ்திரேட் எதிரிக்கு 4 மாத கடினகாவல் தண்டனை விதித்தார்.

0 0 0

உடையார் பாளையம் மாதவர் தெரு சின்னசாமி கோனார் 18-11-31 இரவு இறந்துபோனார். அந்த காரியத்திற்கு வண்ணான் முதலியோர் வரவில்லை. இறந்தவர் பந்துக்கள் சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட்டிடம் மனு செய்து போலீஸ் உதவியால் அந்த பகிஷ்காரத்தை நீக்கி 20-11-31 பிரேத அடக்கம் செய்தனர்.

0 0 0

லாகூருக்கு 7 மைல் தூரத்திலுள்ள ஒரு கிராமத்திற்கருகில் ஒரு காட்டில் துப்பாக்கி தோட்டாவால் அடிபட்டு மாண்டு கிடந்த ஒரு இந்துப் பெண்ணைப்பற்றி ஜனங்கள், டில்லி சதி வழக்கில் அகப்படாமல் மறைந்துவந்த அக்கிரமங்களை பேசிக்கொள்ளுகின்றனர். போலீசார் இது விஷயத்தில் மௌனம் சாதிக்கின்றனராம்.

சென்னை, கயா, முதலிய இடங்களில் மோசடி செய்ததாக, குவாலியர் சமஸ்தானத்தில் சென்ற மாதம் கைதியான பி. டி. பி. அய்யங்கார் மறைந்து விட்டார்.

0 0 0

மோரிஸ் கல்லூரியில் தலைமை பண்டிதரின் மனைவியார் சுட்டது சம்பந்தமாக, நீதிஸ்தல விசாரணை நடத்தவேண்டுமென்று ஜில்லா வக்கீல் சங்கத்தார் கோரியதற்கு சர்க்கார் மறுத்துவிட்டதாகத் தெரிகிறது.

0 0 0

வங்காள இந்திய கிறிஸ்தவர் சங்கத்தின் மானேஜிங் கமிட்டி, இந்திய கிறிஸ்தவர் பிரதிநிதியாகிய திரு. தத்தருக்கு அது தனித்தொகுதியை எதிர்ப்ப தாக தந்தி கொடுத்திருக்கிறது.

0 0 0

பகவத்சிங், முதலிய சிலர் மீது தொடரப்பட்ட வழக்கில் தண்டனை யடைந்த திரு. பி. கெ. தத்தர் திருச்சி சென்ட்ரல் ஜெயிலிலிருந்து சேலத்திற்கு மாற்றப்பட்டாரென்றும், குனின்லால் மட்டும் திருச்சியிலிருக்கிறாரென்றும் தெரியவருகிறது.







## முனிஸிபல் எலக்ஷன்

(நமது நிருபர்:)

டிசம்பர், 1—

காரைக்குடி முனிஸிபல் எலக்ஷன் எற்கனவேகுறிப்பிட்டிருந்தபடி நவம்பர் 30ல நடைபெற்றது. 1, 2, 5, 9, 11, 12, 14, 15 வது வார்டுகள் சமாதானமாகவிட்டுக்கொடுக்கப்பட்டபடியால் மும்முரமாக வேலைகள் நடைபெறவில்லை. 6, 8, 10வது வார்டுகளில் பலமான வேலைகள்செய்யப்பட்டன. அன்று காலை 7 மணிமுதல் 1 மணி வரையும், மாலை 2 மணிமுதல் 6 மணி வரையும் ஓட்டுகள் பதிவு செய்யப்பட்டன. பொது ஜனங்கள் ஆத்திரத்துடன் ஒவ்வொரு போலிங் ஸ்டேஷன்களுக்கும் சென்றுபார்வையிட்டனர். காலைமுதல் மாலைவரை மழை தூறிக்கொண்டேயிருந்ததால் ஜனங்களுக்குக் கொஞ்சம் கஷ்டமாகவே யிருந்தது. டிசம்பர் ௴ 1ல காலை 11 மணிக்கு முனிஸிபல் ஆபீசில் இராமநாதபுரம் ஜில்லா எலக்ஷன் ஆபீசரவர்களால் ஓட்டுப்பெட்டிகள் திறக்கப்பட்டு எண்ணப்பெற்றன. போலீஸ் பாதுகாப்புகள் பலமாக இருந்தன. அபேக்ஷகர்களுக்குக் கிடைத்த ஓட்டுகளின் எண்கள் வருமாறு:—

### 1-வது கழநிவாசல் வார்டு.

| | |
|---|---|
| க. அழ. ராம. கருப்பன் செட்டியார் | 71 |
| ந பெரி ராம ராமசாமிஅம்பலம் | 11 |
| செல்லுபடி ஆகாதது | 2 |

### 2-வது செக்காலை வார்டு.

| | |
|---|---|
| அரு. ராம. அரு. அருணாசலன் செட்டியார் | 73 |
| சி மு அரு முத்துராமன் செட்டியார் | 0 |
| ராம அ அண்ணாமலை செட்டியார் | 1 |
| நா கு ராமநாதன் செட்டியார் | 0 |
| சு மெ முத்துக்கருப்பனம்பலம் | 0 |

### 5-வது அதளைப்பட்டி வார்டு.

| | |
|---|---|
| பெரி. நா. அ. தெய்வராயன் செட்டியார் | 117 |
| சி மு அரு முத்துராமன் செட்டியார் | 0 |

### 6-வது ஜார்ஜ் V வார்டு.

| | |
|---|---|
| டாக்டர் எஸ். சுப்பிரமணிய அய்யர் | 68 |
| அ பரசுராமய்யர் | 56 |
| என் எஸ் வேங்கட்டராமய்யர் | 1 |
| செல்லுபடி ஆகாதது | 2 |

### 8-வது கல்லுக்கட்டி வார்டு.

| | |
|---|---|
| அழ. மு. வீர. வீரப்ப செட்டியார் | 94 |
| ராய சொக்கலிங்கஞ் செட்டியார் | 91 |
| வி கிருஷ்ணய்யர் | 26 |
| லெ மெய்யப்பனம்பலம் | 0 |
| செல்லுபடி ஆகாதது | 1 |

### 9-வது மேல ஊரணி வார்டு.

| | |
|---|---|
| ப. ராம. பழ. ராம. பழநியப்பசெட்டியார் | 57 |
| சித நா ராம நாராயணன்செட்டியார் | 4 |

### 10-வது மேல ஊரணி வார்டு.

| | |
|---|---|
| (சு) ராம அருணாசலம் செட்டியார் | 49 |
| சித வெ முரு அருணாசலம் செட்டியார் | 36 |

### 11-வது கீழவீரப்பனூரணி வார்டு.

| | |
|---|---|
| * மு. ராம. பெரியணன்செட்டியார் | 130 |
| ப ராம பழ ராம பழநியப்ப செட்டியார் | 0 |

### 12-வது முத்தாலம்மன் ஊரணி வார்டு.

| | |
|---|---|
| * அ. மு. க. முத்துக்கருப்பன் செட்டியார் | 53 |
| சி மு அரு முத்துராமன்செட்டியார் | 9 |
| நா கு ராமநாதன் செட்டியார் | 2 |

### 14-வது சி. மெ. புதூர் வார்டு.

| | |
|---|---|
| அ. ராம. ராம. ராமநாதன் செட்டியார் | 65 |
| சி முரு நாராயணன் செட்டியார் | 12 |

### 15-வது புதுச்சந்தை ரோடு வார்டு.

| | |
|---|---|
| * நா. கு. ராமநாதன் செட்டியார் | 68 |
| ப ராம பழ ராம பழநியப்ப செட்டியார் | 11 |
| ராம அ அண்ணாமலை செட்டியார் | 0 |

தடித்த எழுத்தில் போட்டிருப்பவர்கள் வெற்றி பெற்றவர்களாவர். 6—வது வார்டுப்போட்டி என்னவாயிற்று என்பதைப் பலர் எதிர்பார்த்த வண்ணமாக இருந்தனர். பெரிய செல்வரொருவர் முனைந்து வேலை செய்தும் பரசுராமய்யர் தோல்வியுற்றதை யறிந்து ஆச்சர்ய முற்றனர். திரு. ராய சொக்கலிங்கஞ் செட்டியார் வகையரா ஆட்கள் ட்ரம் அடிக்கும் சாயபுடனும், ஏராளமான ரோஜாப்பூ மாலைகளுடனும் உபன்யாசகர்களுடனும், காங்கிரஸ் மோட்டார் காருடனும் தயாராக எதிர்பார்த்திருந்தனர். தோற்றதென்று தெரிந்தவுடன் திசைக்கொருவராகச் சென்றனர். போலிங் ஆபீஸில் போடப்பட்ட மொத்த ஓட்டில் 8-ல் ஒருபங்கு ஓட்டுப் பெறாதவர்கள் கட்டியிருந்த 50 ரூபாய் பறிமுதலாகி விடும்.

9 ஸ்தானங்கட்குப் போட்டியில்லாமற் தேர்ந்தெடுக்கப்பெற்றவர்களின்பெயர் விவரங்கள் வருமாறு:—

1-வது ஆதிதிராவிடர் வார்டு
கு வெள்ளையன்

3-வது கண்டனூர் ரோடு வார்டு
* முத்து அரு சித சிதம்பரம் செட்டியார்

4-வது வார்டு முகம்மதியர் உள்பட
* ச பீ ந மு முகம்மது இப்பிராகிம் ராவுத்தர்
சே மீ மு முகம்மது அப்துல்லா ராவுத்தர்

7-வது முத்துப்பட்டணம் வார்டு
எ ரங்கசாமி ஐயங்கார்

13-வது வார்டு பெண்கள் உள்பட
* திவான்பகதூர் ஆவி பழ சிதம்பரம் செட்டியார்
* மரகதவல்லி அம்மாள்

16-வது லெட்சுமிபுரம் வார்டு
சு கும பழ பழனியப்ப செட்டியார்

17-வது செஞ்சை வார்டு
மே செ ராமசாமி செட்டியார்

* இந்த அடையாள மிடப்பெற்றிருப்பவர்கள் முந்திய கவுன்ஸிலில் அங்கத்தினராக இருந்தவர்கள்.

# தேர்தல் திருவிழா.

## திரு. ராய. சொக்கலிங்கனின் சதுர்.

## பூரண சுயராஜ்யமா? பிரிட்டிஷ் குடியா?

(பாட்டைத்தலை இருளப்பன் எழுதியது.)

பொது ஜனங்களே! நான் தான் பாட்டைத்தலை இருளப்பன்! இந்தத் தடவை முனிஸிபல் தேர்தல்களில் தலையிட வேண்டாமென்றிருந்தேன். ஊழியன் ஆசிரியர் படித்த பள்ளிக்கூடத்தில் நான் படித்தவன்! மார்க் அவரைவிட அதிகம் பெற்றிருக்கிறேன். சென்ற வாரம் வெளியான ஊழியன் பத்திரிகை என்னை வலிய அனுவசியமாக வம்புக்கிழுத்திருக்கிறது. வலிய வம்புக்குப் போக இஷ்டமில்லாவிட்டாலும் வந்த வம்பை விடுகிற சொபாவம் எனக்கு வரவில்லை.

0 0 0

வேடிக்கை விருந்து. தேர்தல் திருவிழா என்ற தலைப்புக்கொடுத்து நாலுபத்தியெழுதப்பட்டிருக்கிறது. காரைக்குடி முனிஸிபல் தேர்தல், திருவிழாவானால் திரு. ராய. சொக்கலிங்கன்தான் தாவியாகவேண்டும். திம. நடராஜனும் வ ரா. ஐயங்காரும் நட்டுவர்களாக வேண்டும். நட்டுவங் கொட்டி நடனம் செய்ய முனிஸிபாலிடிக்குள் புகுந்தனர். பொது ஜனங்கள் தாவி நடனம் இந்தக் கோயில் திருவிழாவுக்கு வேண்டாமென்று தலையில் தண்ணீரை வார்த்துத் துரத்திவிட்டனர். தெருத்தெருவாகச் சதுராடிவிட்டு ராய சொக்கலிங்கனின் கூட்டம் திருப்புத்தாளத்தை மேசையில் வைத்து உட்கார்ந்துவிட்டது.

0 0 0

தேர்தல் சதுரங்க ஆட்டமொன்று ஆடப்பட்டதென்று ஊழியனில் எழுதப்பட்டிருக்கிறது. இரண்டு கட்சியார் ஒருவர் கருவிகளை ஒருவருக்குவெட்டக்கொடுத்து சமாளித்துக் கொண்டனரென்கிறார். இருகை வெட்டுகெட் கிடையில் சிந்தும் ரத்தத்துளியைச் சுவை பார்க்க நின்ற ராய. சொக்கலிங்கனுக்கு வெறும் நாக்கைச் சப்பிக் கொண்டதுதான் மிச்சமாகிவிட்டது. அகப்படவில்லை.

0 0 0

சதுரங்கம் ஆடுமிடத்தில் இரண்டு திறமையுள்ளவர் தலைமை தாங்கி ஆடுவர். மற்றும் திறமையுள்ளவர் அவர்களைச் சார்ந்து கலந்து யோசனை கூறுவர். திறமையிருந்தால் யாராவது ஒரு கட்சிக்காரர் வரவேற்றுக் கொள்வது திண்ணம். இரண்டுகட்சியிலும் சேர்த்துக் கொள்ள யோக்கியதையில்லாத "திறமையற்ற டெம்பாரிகள்'' அங்கிருந்து கலகம் செய்யாதபடி கூடியிருக்கிற பொது ஜனங்களாலேயே துரத்தப்படுவரென்பதை திரு. ராய. சொக்கலிங்கன் அறிவாரா? இவர் நிலை எப்படி இருக்கிறதென்பதை இனியாவதுணர்வாரா?

### ஊழியன் ஆசிரியர் எலக்ஷன் ஜமா.

(தேர்தல் புலி வரைவது.)

"புரட்டு நில்லாது; சத்தியம் ஜெயிக்கும்'' இது ஒரு பழமொழி. ஊழியன் ஆசிரியர் தோற்றுப்போனார். காந்தியடிகள் பரிசுத்தமான பெரியார். பொய் சொல்லாதவர். அவர் சிஷ்ய ரென்று கூறிப் பொதுஜனங்களை ஏமாற்றிப் புரட்டு செய்ததனாலேயே ராய. சொக்கலிங்கன் தேர்தலில் தோல்வியடைந்தார். இதற்குச் சில குறிப்புக்களை இங்கு தருகிறேன்.

0 0 0

திரு. ராய. சொக்கலிங்கன் இதுவரை ராய. சொக்கலிங்கனாக இருந்தார். ஜாதிப்பட்டத்தைத் தன் பெயருடன் சேர்க்கப்படாதென்று வெகுநாளைக்கு முன்னிருந்தே வெளியிட்டிருக்கிறார். வோட்டர் ரோலில் ராய. சொக்கலிங்கஞ் செட்டியார் என்று போடும்படிசெய்து அப்படியே தேர்தலுக்கு நின்றார். இதன் தத்துவம் செட்டியார்கள் ஜாதியை அபிமானிகிறவர்என்று மற்ற செட்டியார்கள் கருதுவதற்காகச் செய்த முதற் புரட்டு.

0 0 0

மெம்பராக விரும்புகிறவர் 120 நாள் முனிஸிபல் எல்லைக்குள் படுத்திருக்க வேண்டுமென்று சட்டமிருக்கிறது. இல்லாவிட்டால் விரும்பக் கூடாது. அதன்படி 120 நாள் சென்ற வருஷத்தில் படுத்திருந்தாரா? அபேக்ஷகராக விண்ணப்பபாரத்தில் கையெழுத்துப்போட்டால் 120 நாள் இங்கு படுத்திருந்தேன் என்பது தானாக அமைகிறது. இது இரண்டாவது புரட்டு.

0 0 0

காரைக்குடி முனிஸிபல் எல்லைக்குள் இவருக்கு வீடு கிடையாது. அமராவதி புதூர் காந்தி நகரில் பல வருஷங்களாக வசித்து வருபவ ரென்பது உலகமெல்லாம் அறிந்த விஷயமாகும். சு. ராம. வுக்குச் சொந்தமான வீட்டில் அச்சாபீஸ் வைத்துத் தொழில்வரி கட்டுகிறார். இந்த நிலைமையில் நின்று ராய. சொக்கலிங்கன் காந்தி நகர் என்று கவரில் அச்சிட்டிருந்ததை மாற்றி ராய. சொக்கலிங்கன் காரைக்குடி என்று அச்சிட்டு ஓட்டர்கட்குக் கடிதம் அனுப்பியது மூன்றாவது புரட்டு.

0 0 0

தேர்தல் அபேக்ஷகர் விண்ணப்பத்தில் "நான் ஒரு பிரிட்டிஷ் குடியென்று உறுதி கூறுகிறேன்'' என்றெழுதிக் கையொப்பமிட்டுக்கொடுத்திருக்கிறார். காங்கிரஸின் திட்டம் பூரண சுயாட்சி யென்பது உலகறிந்ததாகும். பூரண சுய ஆட்சி யென்றால் பிரிட்டிஷாரின் எள்ளளவு சம்பந்தமில்லாத ஆட்சியென்பதே பொருள். இது காங்கிரஸால் விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது. அதன் பெயரால் நின்ற ராய. சொக்கலிங்கன் தான் பிரிட்டிஷ் குடியென்று சத்தியம் செய்திருக்கிறார். பிரிட்டிஷ் குடியென்றால் "வெள்ளைக்கார சக்ரவர்த்தியுடைய அடிமைக் குடித்தனக்காரருள் ஒருவன்'' என்பது பொருளாகும். முனிஸிபல் ஸ்தானத்தில் வந்த ஆசை வெட்கமறியவில்லை. கொள்கையை உணரவில்லை. இதைக்காட்டிலும் பெரும்புரட்டு வேண்டுமா?

0 0 0

செட்டிநாட்டு மகாத்மா திருகூடசுந்தரனார் கையொப்பமிட்டதாக ஊழியனிலொரு பெரியவேண்டுகோள் போடப்பட்டிருக்கிறது. அதில் "காரைக்குடி 21-11-1931'' என்று போடப்பட்டிருக்கிறது. 21 தேதி திருகூட சுந்தரனார் காரைக்குடியிலிருந்து எழுதினாரா? ஊழியனாபீசிலேயே எழுதி அவர் கையெழுத்துப் போடப்பட்டதென்பது உண்மையா; இந்தவேலை ஐந்தாவது புரட்டு.

0 0 0

தேசபக்தர் திருகூடசுந்தரனார் பேரால் வெளியிடப்பட்டிருக்கும் புரட்டுக் கடிதத்தில் "கோகலே என்று பெயர்வழங்கும்'' என்று எழுதப்பட்டிருக்கிறது. இது புரட்டில் புரட்டு. கோகலேஎன்ற உத்தம தேசபக்தருடைய பெயரை தேசபக்தி முதிர்ச்சிக்காகப் பொதுஜனங்கள் செல்லப்பெயராக அழைக்கிறார்களென்று கருதும்படி எழுதியிருக்கிறது. உண்மை யென்னவென்றால் முரு. அருணாசலம் செட்டியாரென்பவர் பலரிடம் பணம் வசூலித்து "கோகலே லைபரரி'' என்று பெயர்வைத்துப் புத்தகங்களை வாங்கியெடுத்துக்கொண்டார். இதற்காகத்தான் அவரைக் கோக்கலே என்று கூறுகின்றனர். இது ஆறாவது புரட்டு.

பாக்கிப் புரட்டுகள் பின்னால் அவசியமிருந்தால் எழுதப்படும்.

### தோற்றவர் கோபம்.

சென்றவார 'ஊழியன்' 12ம் பக்கத்தில் தேர்தல் திருவிழா என்ற தலைப்பில் எழுதப்பட்டிருப்பதில் ஒருபகுதி வருமாறு:—

> இதனிடையில் சமயத்திற்குத்தகுந்தவேஷமிடும் ஓர் சூஸ்திராவதாரி தோன்றினார். அவர் யார்தெரியுமா? இலுப்பமரத்தடியான பாட்டைத்தலை இருளப்பன்! அவர் பக்காப்பேர் வழி யாதலால் தனது உரிமையை பக்கா செய்துகொள்ள இதுதான் கருணம் எனக் கண்டுகொண்டார். "எனக்கு படைப்பு போடாவிட்டால் அப்படியே உங்களை சாப்பிட்டு விடுவேன்'' என அச்சமுறுத்தினார். தன்னிடமிருக்கும் குட்டிச்சாத்தானை ஏவிவிட்டுத் தொலைத்து விடுவதாகப் பயங்காட்டினார். ஆனால் இந்த சூஸ்திராவதாரியையும் வெல்லும் மந்திரவாதி அந்த பெரியதனக்காரர்! அவர் சூத்திராவதாரியைஆட்டும்வித்தையை ஏற்கனவே கற்றுக் கொண்டதால் "இந்தா உனக்கோர் அண்டம்'' என ஒன்றை எறிந்தார். அவ்வளவுதான் தாமதம்; இருளப்பன் இருளில் மாயமாய் மறைந்துவிட்டார்!

தோல்வி யடையும் ஒருவர் வெற்றியடைந்த ஒருவரைக் கண்டு பொறாமைப்பட்டால் இதைவிடக் காலித்தனமாக எழுத முடியாது. காங்கிரஸ் காரர் யாவரும் காந்தியின் சீடர்; அஹிம்சா மூர்த்திகள்: பிறர் மனம் வருந்த கடவாத பெருந்தியாகிகள்! இவர்களின் காரைக்குடித் தலைவர் பெருமான் திரு. ராய. சொக்கலிங்கன். அவருடைய பத்திரிகை ஊழியன். அதில் இப்படி யெழுதப்பட்டிருக்கிறது. மேலெழுதியிருப்பதில் அணுவளவாவது உண்மை யுண்டா? இவ்வளவு பெரிய புரட்டுக்காரனைக் கௌன்ஸிலினுள் நுழையவொட்டாதபடி செய்த ஓட்டர்கட்கு எனது வணக்கம் உரியதாகுக.

"இலுப்பமரத்தடியன்'' "பாட்டைத்தலை இருளப்பன்'' ஊழியன் ஆபீசில் இலுப்பமரமில்லை, அவர் தலையில் ஒரு இஞ்சு மயிர்தான் மீதி வைத்திருக்கிறார். நிறம் சிறிது சிவப்பாக இருக்கிறார். இவை மற்றவருக்கு இல்லையென்றால் கேவலமா? என்று காங்கிரஸில் இருக்கிற உண்மையான அன்பர்களைக் கேட்கிறேன். முனிஸிபல் மெம்பராவதற்கும் இக்கூற்றுக்கும் ஏதாவது சம்பந்த முண்டா?

"இந்தா உனக்கோர் அண்டம்'' என ஒன்று எறியப்பட்டதாம். இந்தத் அண்டு எது? முனிஸிபல் கௌன்ஸில் ஸ்தானங்களுள் ஒன்று. அல்லவா? அதே ஸ்தானமொன்றுக்குத்தான் மகா-ா-ா-ஸ்ரீ ஊழியன் ஆசிரியர் வடிகட்டின பரிசுத்த தேசாபிமானி நின்றது மென்பதை ஞாபகப்படுத்துகிறேன். இருளப்பனுக்கு ஒரு அண்டம் கிடைத்தது. தேசாபிமானிக்குக் கிடைக்கவில்லை. ஊழியனாசிரியர் பாஷையில் இதைச் சொல்லட்டுமா? தொண்ணூற்று நாலு முழ தூரத்தில் கிடந்த ஒரு அண்டத்தைக் கவ்வுதற்குக் கால்களையும் கைகளையும் ஊன்றிக்கொண்டு முக்கு முக்கென்று முக்கி நாக்கைத் தொண்ணூற்றொருமுழம் நீட்டியும் எட்டவில்லை. சரிதானா?

கிடக்கிற அண்டுக்குப் போட்டிபோட்டுத் தோற்றுப்போனால் தோற்ற பிராணி என்ன செய்யுமோ அதை ராய. சொக்கலிங்க மகாத்மா செய்யாமல் முடியாதென்பது உண்மை. ஆனால் வழி தெரியாமல் சும்மா இருக்கிற இலுப்பை மரத்தில் முட்டி இருளப்பனைக் கிளப்பிவிடுவதில் லாபம் வருமா என்பதை யாவது யோசித்திருக்கலாம்.

"இலுப்பமரத்தான்.''

# குமரன்

காரைக்குடி

பிரஜோற்பத்திஸுகார்த்திகைமீ கஅ


## முனிஸிபல் சபை.

உள்ளூர் முனிஸிபல் கவுன்ஸிலின் தேர்தல் முடிவுபெற்றது. சென்ற வாரக் குமரனில் ஒருவர் கூறிய ஜோஸ்யத்தின்படி நகரத்தார்14, ஐயங்கார்1, ஐயர் 1, பெண் 1, ஆதித்திராவிடர் 1, முஸ்லிம் 2 ஆக முடிவுபெற்றது. இப்பொழுது அமைந்திருக்கும் கௌன்ஸிலை நோக்கும் போது தலைவர் உபதலைவர்களில் மாற்றமெதுவும் ஏற்படுமென்று தோன்றவில்லை. கௌன்ஸிலர்களில் பெருமாற்றம் ஏற்பட்டுவிட்டதென்னலாம். பழய கௌன்ஸிலர் 17 பேரில் 7 பேர்தான் இப்போது அங்கம் பெற்றிருக்கின்றனர். நால்வர் அபேக்ஷைப்பட்டனர். அபேக்ஷைப்பட்டவர்களுள் திருவாளர் சி.மு. அரு. முத்துராமன் செட்டியாரும், திருவாளர் சித. நா. ராம. நாராயணன் செட்டியாரும் காரைக்குடி யூனியன் சபையிலும், முனிஸிபாலிடியிலும் தொடர்ந்து சுமார் 30 ஆண்டுகளாக இரண்டாசனத்தை சர்வமானியமாக அனுபவித்து வந்தவர்களாவர். ஏது எப்படியானாலும் இவ்விருவரும் ஒவ்வொரு தடவையும் எலக்ஷனிலோ நாமினேஷனிலோ இடம் பெற்று வந்து உட்கார்ந்திருப்பர். இந்தக் கவுன்ஸிலில்தான் திரு. நாராயணன் செட்டியார் பென்ஷன் பெற்று ஒதுங்கினர். திரு. முத்துராமன் செட்டியார் ஆயாசத்துடன் ஓய் வெடுக்க வேண்டியவரானர். மற்ற இருவரும் நிலைமையை உத்தேசித்து வாபஸ் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

புதிதாக 13 கௌன்ஸிலர்கள்தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். இவர்களாலும் கௌன்ஸிலுக்குஅதிகமான சாதக பாதகங்கள் ஏற்படுமென்று சொல்வதற்கில்லை. சென்ற கௌன்ஸிலின் பிற்பாகம் எப்படி நடைபெற்றதோ அப்படியேதான் நடைபெறக் கூடுமென்று தோன்றுகிறது. கௌன்ஸிலர்களில்மெஜாரிட்டி புதிதானாலும் கௌன்ஸிலின் போக்கு உள்ளபடிதானிருக்குமென்று கூறிவிடலாம். இந்தத் தேர்தலில் குறிப்பிடத்தக்க போட்டி 6-வது வார்டில்தான் இருந்தது. திரு. டாக்டர் சுப்பிரமணிய ஐயரை யெதிர்த்து திரு. அ. பரசுராமய்யர் நிறுத்தப்பட்டார். அவருடைய முதலாளி திரு. அ. ராம. வெ. லெட்சுமணன் செட்டியார் முழுசக்தியையும் செலவிட்டுப் போட்டி நடத்தினர். கடைசியில்பணகாரரென்பதுகொண்டு மட்டும் பொது ஜனங்களை மடக்கி விடலாமென்ற எண்ணம் ஒழிந்துபோயிற்று. சென்ற தேர்தலில் ஐயர்மார் கட்சிக்குவந்த கெட்ட பெயரும் பணத்தால் யாரையும் அடிமைப்படுத்தலாமென்ற பிறழ்ந்த உணர்ச்சியும் பட்டொழிந்தன வென்னலாம். இந்தப்பரசுராமய்யர் யாரென அறியப்பலர் ஆசைப்படக்கூடும். சுயமரியாதை மகாநாடு இவ்வூரில் நடைபெற்ற போது சொந்தக்காரச் செட்டியார் பெருந்தன்மையுடன் இடம் தருவதாக ஒப்புக் கொண்டதைக் கொடுக்கக்கூடாதென்று தடுத்த பெருந்தகையாளராவர்.

காங்கிரஸ் ஆர்பாட்டம் பெரிதாக இருந்தது. அதன் சார்பென்று சொல்லி நின்ற இருவரும் தோல்வியடைந்தனர். ஒருவராவது உள்ளே செல்லும் படியான சந்தர்ப்ப மேற்படாது போனதற்கு வருந்துகிறோம். ஒருவராவது சென்றிருந்தால் காரைக்குடிக் கௌன்ஸிலில் அவர்களால் என்ன செய்யமுடியு மென்பதைப் பொதுஜனங்கள் உணர வசதி கிடைத்திருக்கும். வெளியே இருந்து முனிஸிபல் சபையைக் குறை கூறுவதில் 100க்கு 50பங்கு உள்ளே சென்றவரால் கூற முடியாமற்போவது திண்ணம். அந்த ஐம்பதும் நிர்வாகத்தலைமையேற்படுமாயின் ஒழிந்துபோகும். இதுதான் எங்குங் கண்டுவரும் உண்மையாகும். இந்தமுறை காங்கிரஸின் பெயரைச் சொல்லி நின்றவர்கள், எலக்ஷனில் வந்தால் தேர்தல் சூழ்ச்சி புரட்டு முதலிய எல்லாமில்லாமல் முடியாதென்பதை அனுபவத்தில் கண்டிருப்பார்களென்று கூறவேண்டியதில்லை. காங்கிரஸ் பெயரை யுபயோகித்து நின்ற திரு. ராய. சொக்கலிங்கஞ்செட்டியார் தோற்கடிக்கப்படுவதற்குக்காரணம் அவருடைய முரட்டுத்தனமான பேச்சும் அற்பத்தனமான எழுத்தும் வணங்காமுடித்தனமுமேயாகும். அந்த வார்டில் அவருக்குக் குருட்டுத்தனமாகக் கிடைத்த வசதி மற்றொருவருக்குக் கிடைத்திருந்தால் போட்டியுமிருந்திராது. இருந்தாலும் முழுஓட்டும் பெற்றிருக்கலாம். தேசபக்தியில் உண்மையாகச் சிறந்த அன்பர் பலர் அந்தவார்டில் தங்கள் முழுபலத்தையும் செலவிட்டுப் பாடுபட்டிருக்கின்றனர். சண்டைக்கெடுத்த தடி முருங்கைக் கொம்பாதலால் ஒடிந்து வீழ்ந்ததில் அதிசயமொன்றுமில்லை.

புதிதாக வந்திருக்கும் முனிஸிபல் சபையாருக்கு அவர்கள்உள்ளே நுழையும் போதே இரண்டொரு விண்ணப்பஞ்செய்ய விரும்புகிறோம். கௌன்ஸிலானது எந்தப் பலத்தைக்கொண்டாவதிருக்கட்டும். உள்ளே செல்லும் போது "அந்த இடம் காரைக்குடிப் பொது ஜனங்கட்குச் சொந்தமானது, 20,000 ஜனங்களுடைய உடலும் உயிரும் பாதுகாக்கப்படுவதற்காக இந்த சபை யிருக்கிறது, அதற்காகவே வரி வசூலிக்கப்படுகிறது, அதை ஒழுங்காகப் பயன்படுத்தவே தங்களை ட்ரஸ்டிகளாகப் பொது ஜனங்கள் நியமித்திருக்கிறார்கள், நாம் சரியாக நடப்போம்" என்ற மனவுணர்ச்சியோடு செல்லவேண்டுமென்று விரும்புகிறோம். இந்த உணர்ச்சி எல்லோர் மனத்திலுமிருந்தால் ஒரு கஷ்டமு மேற்படாது. சண்டையுமில்லை, வம்புமில்லை. சென்ற கவுன்ஸிலில் செய்யப்பட்ட வேலைகளுள் மிகச் சிறப்பாக நடைபெற்றிருப்பது ரோடு வசதியாகும். பெரிய ரோடுகள் யாவும் வெள்ளைக்கல் போட்டு நன்கு செப்பனிடப்பட்டு விட்டன. வெளிச்ச வசதியும் போதிய அளவு அமைக்கப்பட்டிருக்கின்றது. இவ்விரண்டும் பாராட்டற்குரியனவாகும். புதிய கௌன்ஸிலருள்ளத்தில் 'வெளியிடங்களிலிருந்து வருபவர்களுக்குத் தங்குமிடம் ஏற்படுத்த வேண்டும்' "கக்கூஸ் அமைக்க வேண்டும்" என்ற இரண்டைப் பதித்துக்கொள்ளும்படி வற்புறுத்துகிறோம். கான் கட்டுவதும், தண்ணீர்க்குழா யமைப்பதும் இன்றியமையாதனவே யாயினும் இப்போதுள்ள பண நெருக்கடியில் நாம் சிபார்சு செய்யத் தயங்குகிறோம். கக்கூஸ் இல்லாமையால் மனிதர்கள் மிருகங்களாக வளர்ந்துவருகின்றனரென்பதை நேரிற் காண்கிறோம். வீடு தோறும் கட்டாயமாகக் கக்கூஸ் கட்டும்படி ஏற்பாடு செய்யவேண்டும். சட்டம் இருக்கிறது. கௌன்ஸிலின் ஆரம்ப காலத்தில் கடுமையாக ஏற்பாடு செய்தால் அடுத்த எலக்ஷன் காலத்தில் ஜனங்கள் வழக்கப்பட்டுவிடுவார்கள். காலங் கடத்தினல் கடைசியில் ஓட்டு கிடைப்பதின் பொருட்டு ஜனங்களின் ஆத்திரம் ஏற்கக்கூடாதென்று மழுப்ப வேண்டியிருக்கும். பெண்கள் கக்கூசுக்குப் போவதற்குப் பதிலாக சந்திக்கு வருவதென்பது கொடுமையாகும். சுகாதாரக் கேடுமாகும். இந்தக் காரணத்தால் பன்றிகளையும் அப்புறப்படுத்த முடியவில்லை. பன்றிகள் ஊரை நாறடிக்கின்றன. புதிய கௌன்ஸிலர்கள் இவ்விஷயத்தில் ஊக்கமெடுத்து அமுல் செய்வார்களென்று எதிர்பார்க்கிறோம். வெளியூர்களிலிருந்து வியாபாரிகளும் காட்சியாளரும் ஏனைய பொது ஜனங்களும் இவ்வூருக்கு வந்தால் தங்கப் பொதுவான இடங் கிடையாது. இரவு நேரத்தில் ரயில்—மோட்டாரில் பல பிரயாணிகள் வருகின்றனர். தங்குமிடம் ஏற்படுத்தவேண்டுவது முனிஸிபாலிடியின் முக்கிய கடமைகளுள் ஒன்றாகும். ஏற்கெனவே டிராவலர்ஸ் பங்களா ஒன்று கட்ட செக்காலைக் கருகில் இடம் அக்குயர் செய்திருக்கிறது. இப்பொழுது ஸ்டேஷன் ரோட்டில் ஒரு இடம் அக்குயர் செய்து ஒரு சத்திரமாவது பங்களாவாவது கட்ட ஏற்பாடு செய்தலவசியமாகும். இக்தக் கட்டிடத்துக்குப் பொருள் செலவு செய்ய முனிஸிபாலிடிக்கு வசதிக் குறைவில்லை.

கூடிய வரையில் வீண் கட்சிகளில்லாமலும் முக்கியமான சந்தர்ப்பங்களில் தாக்ஷண்யத்தையுத்தேசித்துப் பொதுஜன விரோதமாக விட்டுக்கொடாமலும் கௌன்ஸிலர்கள் நடந்து காரைக்குடி முனிசிபல் சபையைக் கண்ணியப்படுத்துவார்களென்று நம்புகிறோம்.

## எண்டிசைக்காட்சி.

### ஜாதிக்குறும்பா? மிருகத்தனமா?

சீர்திருத்தத் துறையில் முனைந்து நிற்கும் பரோடா அரசாங்கம், சமீபத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்கென்று தனியாக வைக்கப்பட்டிருந்த பாடசாலைகளை யொழித்து எல்லா பாடசாலைகளிலும் எல்லாருக்கும் இடமுண்டு என்று ஓர் சட்டத்தை இயற்றியது. இதனைக் கண்ட அந்நாட்டு ஜாதி இந்துக்கள் எழுத முடியாதவாறு மனிதத் தன்மையை யிழந்து அட்டகாசம் செய்கிறார்களாம். அசோஷியேடட் பிரஸ் செய்திபோன்று மேற்படி சட்டத்தால் வெறி பிடித்த ஜாதி இந்துக்கள் தம் பிள்ளைகளை பள்ளிக்கூடங்கட்கு அனுப்பாது தடை செய்துவிட்டார்களென்றும், அவர்களில் சிலர் ஆதிதிராவிடர்களைத் துன்புறுத்தித் தமக்கு வேறு பள்ளிக்கூடங்களை வேண்டு மென்று சொல்வதாக விண்ணப்பங்கள் எழுதி வாங்குகின்றார்களென்றும், கூறுகிறது. இவ்விரண்டு தீய வழிகளையும் தவிர வேறு கொடிய சில முறைகளையும் கையாடுகின்றார்களாம். ஆதிதிராவிடர்கள் உபயோகிக்கும் ஓர் கிணற்றில் மண்ணெண்ணெயை ஊற்றி தண்ணீரைக் கெடுத்துவிட்டார்கள். பல விடங்களில் தாழ்த்தப்பட்டாருக்குச் சொந்தமான வயல்கள் முதலியன அழிக்கப்பட்டுவிட்டன. இவற்றையெல்லாம் பார்க்கும் போது ஜாதி இந்துக்கள் உண்மையாக மனிதத் தன்மையை இழந்துவிட்டார் களென்றே கூற வேண்டும். இத்தகைய மிருகத்தனம் ஜாதிக்குறும்பினல் (அல்லது பைத்தியத்தினல்) ஏற்படுவதினலே அரசாங்கம் இக்கருணத்தை இழந்துவிடாது இரக்கமற்ற முறையில் ஜாதி இந்துக்களை நடத்த வேண்டும். நமது நாட்டில் ஆங்காங்கு இடையிடையே இத்தகைய ஜாதி இந்துக்களின் அட்டகாசம் தலையெடுத்து தாழ்த்தப் பட்டாரில் அவ்வப்பொழுது உதயமாகின்ற ஊக்கத்தைக் கெடுத்து அவர்களுடைய சுதந்திர உணர்ச்சியை அழித்துவருவது கண்கூடு. அக்குறும்பை அடியோடு நாசமாக்க வேண்டிய ஒரு காலம் நெருங்கி விட்டதால் அரசாங்கம் தமது திட்டத்தை நிறைவேற்றவே செய்யுமென்று நம்புகின்றோம்.

### தென்னுட்டில் வடநாட்டார் புரட்டு.

ஸ்ரீரங்கம் சித்திரை வீதியில் வடநாட்டிலிருந்து ஒரு கூட்டம் மனிதர்கள் வந்திருக்கின்றார்கள். அவர்கள் தம்மைப் பெரிய தவசிகளென்றும், மோக்ஷத்திற்காகவும், மழைக்காகவும் வேள்விகள் செய்ய வல்லவர்களென்றும் விளம்பரம் செய்துகொள்கிறார்கள். அதோடு பித்தளை தகட்டினல் செய்தவோர் யாககுண்டத்தில் தினமும் விறகு, நெய், அரசு முதலிய மரங்களின் சுள்ளிகளாகியவற்றை போட்டு எரித்து யாகமும் செய்துவருகின்றார்கள். யாகம் முடிந்த பிறகு யாக குண்டத்திலிருந்து கிடைக்கின்ற சாம்பலை உடம்பில் பூசிக்கொள்கிறார்களாம். இவ்வாறு என்ன உத்தேசத்தோடு பூசுகிறார்களோ தெரியவில்லை. எது எப்படியாயினும் ஆகட்டும். அவர்கள் மோக்ஷத்திற்காகத் தவஞ்செய்கின்றார்களென்றால், பிறரை ஏமாற்றாது அவர்களே முதலாவது தேவலோகத்துக்குப் போகட்டும். அன்றி உலகிற்காக ஏதுவேனும் செய்வதாக விருந்தால் இந்தியாவிலிருந்து தீண்டாமையை ஒழித்து, ஜாதியை யகற்றி, நாட்டிற்கு சுயராஜ்யத்தைக் கொண்டுவரட்டும். இதனைசெய்ய அவர்களால் இயலுமா?

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| செய்கோன்வட்டம் | 2—8—0 |
| பினங்கு ,, | 2—0—0 |
| கொழும்பு ,, | 0—10—0 0—12—0 |
| சென்னை ,, | 0—3—0 0—2—6 |
| ரங்கூன் உண்டியல்வட்டம் | 0—12—0 |
| ஈப்போ வட்டம் | 2—0—0 |
| பவுன் | 17—14—0 |
| வெள்ளி 100 ரூ எடைக்கு ரூ | 60 |

### காரைக்குடி கோவாபரேடிவ் நகர பாங்கு லிமிடேட்.

இந்த பாங்கியின் "மகாசபை" ஒன்று நாளிது திங்கட்கிழமை (7—12 31) மாலை 6-மணிக்கு இவ்வூர் வாசகசாலையில் நடைபெறும். அவ்வமயம் 1930—31-ஹ ஆடிட் ரெிபோர்ட்டியை ட்வாசித்தல், லாபத்தைப் பிரித்தல், அவசியமாயுள்ள பைலாக்களை மாற்றுதல் முதலிய நடவடிக்கைகளும் இதர விஷயங்களும் நடைபெறும் என்று திரு. சீனிவாஸய்யர் (காரியதரிசி.) அறிவிக்கிறார்.

(மீட்டிங் முடிவானவுடன் மெம்பர்களுக்கு டிவிடெண்டு பட்டுவாடா செய்யப்படுமாம்.)

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து சிங்கப்பூர் முதலான விடங்கட்கு பிரயாணமாகும் விவரம்:—

| கப்பல் | புறப்படுந்தேதி |
|---|---|
| ரஜுலா | 13—12—31 |
| ரோஜா | 27—12—31 |

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணம் வந்துசேரும் விவரம் வருமாறு:—

| கப்பல் | வருந்தேதி |
|---|---|
| ரஜுலா | 3—12—31 |
| ரோஜா | 17—12—31 |
| ரஜுலா | 31—12—31 |



## தந்திச் செய்தி.

ரங்கூன், டிச. 2—

| | |
|---|---|
| படகு நெல் | 88 |
| ரயில் நெல் | 87 |
| சிறிய மில்லரிசி | 210—212, 8 |
| நசீன் சிறிய மில்லரிசி | 232, 8 |
| நசீன் எஸ். க்யூ. | 245 |
| நசீன் மில்சார் புழுங்கலரிசி | 235—240 |
| மீடான் பஜார் | 250—252,8 |
| மீடான் எஸ். க்யூ. | 267,8 |
| புழுங்கலரிசி (ரெடி) | 240—255 |
| மில்சார் | 240—255 |
| நசீன் | 230—240 |
| தவணை வட்டி | 0—10—0 |
| நடப்பு வட்டி | 0—10—6 |

### ஸ்ரீமதி மரகதவல்லியாருக்குப் பாராட்டு.

ஈப்போ தனவைசிய இளைஞர்கள் தெரிவிக்கின்றனர்.

"ஸ்ரீமதிமரகதவல்லியாரைபோட்டியின்றி காரைக்குடி முனிசிபாலிட்டிக்கு அங்கத்தினராக தேர்ந்தெடுத்திருப்பதை மனமாரப் பாராட்டுகிறோம். அவர் பொது ஜனங்களுக்கு நல்ல தொண்டு செய்வாரென்று நம்புகிறோம்" என்று ஈப்போ தனவைசிய இளைஞர்கள் தந்தி மூலம் திரு. மரகதவல்லியாருக்கு அறிவிக்கின்றனர்.

### லோகல் போர்டுகட்கு புதிய தேர்தல்முறை.

பெட்டியில் அபேக்ஷகர்கள் படம்.

அரசாங்கம். லோகல்போர்டு தேர்தல் சம்பந்தமாக அடியில் வரும் புதிய முறையை வெளியிட்டிருக்கின்றது:—

ஒவ்வொரு அபேக்ஷகருக்கும் ஒவ்வொரு பாலட் பெட்டி இருக்க வேண்டும். கல்வி யறிவில்லாதவர்களுக்கு உதவி செய்யும் பொருட்டு அபேக்ஷகர்களுடைய புகைப் படங்கள் அந்தந்தப் பெட்டிகளில் ஒட்டப்பட்டிருக்க வேண்டும்.

வோட்டர்கள் குருடர்களா யிருந்தால் அபேக்ஷகர் களுடைய முன்னிலையில் அவர்கள் வோட்டு செய்ய விரும்புபவருடைய பேரையோ, ஆளடையாளத்தையோ கேட்க வேண்டும்.

ஆதிதிராவிடர்களைப் பொறுத்தவரையிலும், அவர்கட்காக ஒதுக்கி வைக்கப் பட்டிருக்கும் ஸ்தானங்களை விட கூடுதலான அபேக்ஷகர் களிருந்தால், துண்டுபோட்டுப் பார்ப்பதின் மூலமோ கையுயர்த்துவதின் மூலமோ அளவுக்கு மேற்பட்டவர்களை நீக்கப்படலாம்.

### சாயாசன் தூக்கிலிடப்பட்டார்.

இன்னும் 8 பேருக்குத் தூக்குத் தண்டனை.

பர்மா கலகத் தலைவனாகிய சாயாசன் ஏற்கெனவே அறிவிக்கப்பட்டிருந்த வண்ணம் நவம்பர் 28-ந் தேதி தூக்கிலிடப்பட்டார்.

அன்றி, தாயட்மியோவில் நடைபெற்றுவந்த புரட்சி வழக்கில் ஸ்பெஷல் ஜட்ஜ் 8 எதிரிகட்கு தூக்குத் தண்டனையும், 6 எதிரிகட்கு ஆயுள் பரியந்தம் தண்டனையும் விதித்தார். ஹென்சடாவிலும், புரோமிலும் இன்னும் கொள்ளை நடைபெற்று வருகிறது.

## லண்டன் மார்க்கெட்

(ராய்ட்டர் ஸ்பெஷல் கமர்சியல் சர்விஸ்)

### வெள்ளி.

லண்டன் டிச. 1

| | |
|---|---|
| ஸ்பாட் .... .... .... | $19\frac{1}{4}$ ஷிலிங் |
| பார்வேர்டு .... .... .... | $19\frac{1}{2}$ |

### தங்கம்.

லண்டன் டிசம். 1

பார் தங்கம் (Fine) ஒரு அவுன்ஸ் £ 6—5—0

### உலோகங்கள்.

லண்டன், டிச. 1

| | |
|---|---|
| செம்பு இங்கிலீஷ் முதல்தரம் (Selected) | £ $40\frac{1}{2}$ |
| செம்பு (பித்தளைக் கலப்பு) .... .... | £ 53 |
| நாமினல் எல்லோ மெட்டல்.... .... | £ 41 |
| நாமினல் ஸ்பெல்டர் (Hard Indian Brands) | £ $12\frac{3}{4}$ |
| 24 கேஜ் சுருட்டுத் தகடு .... .... | £ 9 5/14 |

### ஈயம்.

லண்டன், டிச. 1

ஈயம் (English Ingots) டன் .... £ 141

### ரப்பர்.

லண்டன் டிச. 1

புகைபோட்ட ஷீட் ஸ்டாண்டர்டு வரையுள்ளது ஒரு ராத்தல்

| | | |
|---|---|---|
| வாங்குபவர் பென்ஸ் 2, 15/16 | விற்பவர் பென்ஸ் | 3. |
| பேல்கிரீப் வாங்குபவர் $3\frac{1}{8}$ | விற்பவர் பென்ஸ் | $3\frac{1}{4}$. |

### கொழும்பு விளைபொருள்.

லண்டன் டிச. 1

கொப்பரா ஸ்பாட் கோட்டட் £ 15. 10 டிசம்பர்

ஷெ விற்பவர் £ 16. 10, 0

தேங்கா யெண்ணெய் ஸ்பாட் விற்பவர் ஷிலிங் 26. 6 டிசம்பர், ஜனவரி விற்பவர்கள் 24: 6.

### ஆலப்பிழை மிளகு.

லண்டன், டிச. 1

ஒரு அந்தர் ஷிலிங் 65, ஜனவரி-மார்ச்

### காப்பி.

லண்டன், டிச. 1

நியூயார்க் மார்க்கெட் நன்றாக இருக்கிறது.

ரியோ காபி No. 7. தரம் ஸபாட் ஒரு பவுண்டு $6\frac{1}{2}$ சென்ட்.

### சிலோன் தேயிலை.

லண்டன், டிச. 1

இன்று லண்டன் மார்க்கெட்டில் 17,600 கட்டுகள் ஏலம் கூறப்பட்டன. நிரம்ப கிராக்கியிருந்தது. விலை நிதானமாக இல்லை. புரோக்கன் ஆரஞ்சு பெகோஸும், புரோக்கன் பெகோசும் விலை குறைந்தாலும் கொடுக்கப்படவில்லை. புரோக்கன் பெகோஸுக்கு மட்டும் பிரியமிருந்தது.

| | | | | |
|---|---|---|---|---|
| பெக்கோஸ் ஒரு பவுண்டு | $7\frac{3}{4}$ பென்ஸ் | முதல் | $29\frac{1}{2}$ | வரை |
| புரோக்கன் பெக்கோஸ் | $8\frac{1}{4}$ | முதல் | 28 | வரை |
| ஆரஞ்சு பெக்கோஸ் | $10\frac{1}{2}$ | முதல் | 30 | வரை |
| புரோக்கன் ஆரஞ்சு பெகோஸ் | $11\frac{1}{2}$ | முதல் | 30 | வரை |

### உபநிதி மசோதா நிறைவேற்று.

சென்ற மாதத் தொடக்கத்தில் டில்லி சட்டசபை ஆரம்பித்ததென்றும் அதில் பல மசோதாக்களோடு உபநிதி மசோதாவும் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப் பட்டதென்றும் சட்டசபை ஒரு மெஜாரிட்டியால் உபநிதி மசோதாவை தோற்கடித்துவிட்டதென்றும் எழுதப் பட்டிருந்தது. ஆனல் சென்றவாரம் நடைபெற்ற ராஜாங்க சபையில் அது ஆலோசனைக் கெடுக்கப்பட்டு நிறைவேறிற்று. மசோதாவுக்கு சாதகமாக 24 ஓட்டுகளும், பாதகமாக 9 ஓட்டுகளும் கிடைத்தன.

### தபால் கட்டண உயர்வு.

1931-ம் வருஷம் டிசம்பர் மாதம் 15 ந்தேதி முதல் உள்நாட்டு தபால் கடிதங்களின் கட்டண விகிதங்களையும்தந்தி மணியார்டர் விகிதங்களையும் அதிகப்படுத்தி யிருக்கின்றனர். இரண்டரை தோலா எடைக்கு அதிகப்படாத கடிதங்களுக்கு ஒரு அணு மூன்று பைசாவும், இதற்கு மேற்பட்ட ஒவ்வொரு இரண்டரை தோலா நிறைக்கும் இதேவிகிதமாகவும் உயர்த்தியுள்ளனர். தபால் கார்டின் விலை ஒன்பது பைசா. ரிப்ளை கார்டின் விலை ஒன்றரை அணு. போதுமான ஸ்டாம்புஒட்டாத தபால் கார்டை தபாலில் போட்டால், அதை கார்டில் கண்டுள்ள விலாசத்திற்கு அனுப்ப மாட்டார்கள். ஆனல் கிழித்தெறிந்து விடுவார்கள். தந்திமணியார்டர்களுக்கு ஏற்கனவேயுள்ள விகிதத்திற்கு மேல் 2 அணு வீதம் வசூல் செய்வார்கள்.

### வெளிநாட்டு சந்தாதாருக்கு அறிவிப்பு:

மலாய்நாடு, சைகோன், ஜாவா, ஆபிரிகா, இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய இடங்கட்கு பத்திரிகைக்கு அரையணுவாக இருந்த தபால் கட்டணம் இந்தவாரம் முதல் முக்காலணுவாகி விட்டபடியால் ஷெ வெளிநாடுகளிலுள்ள நமது சந்தாதார்க்கு வருஷசந்தா ரூ. 7—0—0 ஆக உயர்த்தப் பட்டிருக்கிறது.

மானேஜர் "குமரன்"

### ஜஸ்டிஸ் கட்சி மகாநாடு.

டிசம்பர் 30,31-ல் கூட்டம்

ஜஸ்டிஸ் கட்சி மகாநாட்டை டிசம்பர் 30,31-ல் நடத்துவதென்று முடிவு செய்திருக்கிறார்கள்.

## அரியக்குடி.

### ராமவிலாஸ் பந்தடிமால்.

இப்பந்தடிமாலின் பைனல் விளையாட்டு டிசம்பர் 9-ந்தேதி நடைபெறும். சாண்டோ லெ. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் தலைமைதாங்கி வின்னர்கட்கும், ரன்னர்கட்கும் பரிசு வழங்குவார்கள்.

### கோவை: முனிஸிபாலிடி

கள்ளுக்கடை மறியலுக்குதவ அதிகாரமில்லை.

கடந்த சில மாதங்கட்கு முன்னர் கோயம்புத்தூர் முனிஸிபல் சபையார், கோவையில் நடக்கும் கள்ளுக்கடை மறியலுக்காக ரூ. 1,000 சாங்ஷன் செய்திருந்தனர்; (இத்தொகை ஷெ செலவிற்காக சர்க்கார் அனுமதித்த பின்பு கொடுக்கப்பட முடியும்.) முனிசிபல் சபையார், அத்தொகையை சுகாதாரப் பிரசாரத்துடன் சேர்த்து நடத்தப்படுமென்றும், முனிசிபல் சிப்பந்திகளே ஒருவித பலாத்காரமுமின்றி மறியல் பிரசாரம் செய்வார்களென்றும் தெரிவித்திருந்தனர். இதை அனுசரித்து சர்க்காருக்கு கடிதம் அனுப்பப்பட்டது. சர்க்கார், முனிசிபல் சபைகள் கள்ளுக்கடை மறியல் செய்ய பணம் சாங்ஷன் செய்வதை ஆட்சேபித்து தாங்கள் பிறப்பித்திருந்த உத்தரவை மாற்ற முடியாதென பதிலளித்து விட்டனர்.

### கீழச்சிவற் பட்டி.

தாசிகட்குத் தொழில்வரி ஏற்படுத்தப்பட்டது.

கீழசிவற்பட்டி பஞ்சாயத்து போர்டார், ஸ்திரமாகவுள்ள சில குடித்தனத்தாசிகட்குத் தொழில்வரி விதித்திருக்கின்றனர். இது சம்பந்தமாக ஊரில் சிறிது பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

### இராமநாதபுரம் ஜில்லா.

புதிய டெப்டிக் கலக்டர்.

ஜனுப் இ. எச். ஏப்ரஹம் சேலத்திலிருந்து இராமநாதபுரம்ஜில்லாவில் டெப்டி கலெக்டராக மாற்றப்பட்டிருக்கிறார்.

### ராமநாதபுரம் ஜில்லா போர்டு கூட்டம்.

டிசம்பர் 12 ந்தேதி நடைபெறும்.

1931-ம் வருஷம் டிசம்பர் மாதம் 12 ம்தேதி சனிக்கிழமை காலை 8-45 மணிக்கு மதுரையில், இராமநாதபுரம் ஜில்லா போர்டாரின் கட்டிடத்தில் மேற்படி போர்டாரின் சாதாரண மீட்டிங்கு கூடப்படும்.

## விளம்பரம்.

ராமநாதபுரம் கவர்மெண்டு தலைமை ஸ்தல ஆஸ்பத்திரிக்கு 1932—1933 வருஷத்திற்கு வேண்டிய ஆகாராதி சாமான்களும் இதர சாமான்களும் சப்ளை செய்வதற்கான டெண்டர்கள் (இரண்டு.) ராமநாதபுரம் கவர்மெண்டு தலைமை ஸ்தல ஆஸ்பத்திரி சூப்பிரன்டெண்டரால் 1932 ஜனவரி 4உ திங்கட்கிழமை பகல் 2மணி வரையில் ஏற்றுக்கொள்ளப்படும். மற்ற விவரங்களுக்கு ராமநாதபுரம் சூப்பரின்டெண்டரிடம் எழுதவும்.

சூப்பிரெண்டன்ட்,
கேவர்ன்மெண்ட் ஹெட் குவார்டஸ் ஹாஸ்பிட்டல்,
ராமனுதபுரம்,
26—11—31.

# வட்ட மேஜை மகாநாடு.

## "ராணுவப் பொறுப்பை அளிப்பது முடியாத காரியம்."

### கவர்னர் ஜனரலுக்கு விசேஷ அதிகாரம்.

### லார்டு சாங்கியின் அறிக்கை.

லண்டன், நவ. 24—

ராணுவம், வெளிநாட்டு சம்பந்தம் இவ்விரண்டு விஷயங்களையுமொட்டி லார்டு சாங்கி ஓர் அறிக்கை தயாரித்திருக்கிறார். அவைகளைப்பற்றி நவம்பர் மாதம் 25ல சமஷ்டிக் கமிட்டிக் கூட்டத்தில் விவாதிக்கப்பட்டது. அவ்வறிக்கைகூறுவதாவது:— இந்தியரிடம் பூரண அரசியல் நிர்வாகத்தையும் மாற்றுவதற்கு முன் மத்திய காலத்தில், ராணுவ நிர்வாகப் பொறுப்பை இந்திய சட்டசபையிடம் விடுவது முடியாத காரியமென கமிட்டியிலுள்ள பெரும்பாலானவர்கள் அபிப்பிராயப்படுகின்றனர். பூரண நிர்வாக பொறுப்பையும், ராணுவ நிர்வாகப் பொறுப்பையும், ஒரே சமயத்தில் அளிக்க முடியாவிடில் ராணுவப் பொறுப்பை மாத்திரம் அளிப்பதும், முடியாத காரியமென்பதே அவர்கள் அபிப்பிராயம். வெளிநாட்டு சம்பந்தமான விஷயங்களுக்கு கவர்னர் ஜெனரல் பொறுப்பாக இருக்கவேண்டுமென பெரும்பாலானவர்கள் கருதுகின்றனர். சென்ற லண்டன் மகாநாட்டில் ராணுவ சப்கமிட்டியார் கூறியுள்ள முறைகளை ஆதாரமாகக் கொண்டே, அது சம்பந்தமான விஷயங்களை இப்போது தீர்மானித்திருக்கிறது. அதாவது இந்திய ராணுவத்தில் இந்தியர்களுக்கு நாளுக்கு நாள் அதிக பொறுப்பு ஏற்படவேண்டுமென்பதே ராணுவ கமிட்டியின் நோக்கமாகும். இந்தியாவில் சட்டசபைக்கு பொருப்பான இந்திய மந்திரி சபையோரிடம் பிரிட்டிஷ் துருப்புகள் உள்பட, பூர்ண ராணுவ நிர்வாகம் இருக்கவேண்டுமென்றும், அப்படியில்லாவிடில் உண்மையாக இந்தியர்களிடம் நிர்வாகப் பொறுப்பளித்ததாகாதென்றும் சில அங்கத்தினர்கள் கூறினார்கள். அவ்விஷயமாக இடைக்காலத்தில் சில அவசியமான பாதுகாப்புகளிருப்பதிலும் தங்களுக்கு ஆட்சேபனையில்லை யென்றும் அவர்கள் கூறினார்கள். எனினும் அந்த அபிப்பிராயத்தை பெரும்பாலோர் ஆதரிக்கவில்லை. சென்ற கூட்டத்தின் முடிவான யோசனைகளையே, பெரும்பாலோர் அங்கீகரிக்கிறார்கள். சமஷ்டிக் கமிட்டியின் சென்ற கூட்டத்தில் கீழ்க்கண்டவாறு முடிவு செய்திருக்கின்றனர்:—

"இதுவரை பார்லிமெண்டு நிர்வாகத்திலிருந்து வந்த அதிகாரங்களையும், பொறுப்புகளையும் ஒரே தடவையில் இந்தியர்களிடம் மாற்றிவிடுவதென்பது முடியாத காரியம். இடைக்காலத்தில் ராணுவத்திற்கு கவர்னர் ஜெனரல் பொறுப்பாளியாக இருக்கவேண்டும். அவ்விஷயமாக கவர்னர் ஜெனரலுக்கு, மந்திரி உதவியாக இருப்பார். மந்திரி கவர்னர் ஜெனரலுக்குத்தான் பொறுப்பாளியே யொழிய சட்டசபைக்கு பொறுப்பாளியாக இருக்கவேண்டியதில்லை.

ராணுவ சம்பந்தமான பல விஷயங்களில் சட்டசபை சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதைப்பற்றி அங்கத்தினர்களுக்குள் அபிப்பிராய பேதமில்லை. ராணுவ விஷயங்களையொட்டி சட்டசபையில் விவாதிக்க போதிய சந்தர்ப்பங்கள் அளிக்கவேண்டியது அவசியமே. ராணுவத் தொகை, அமைப்பு, செலவு இவ்விஷயங்களை பரிசீலனை செய்ய பொறுப்புள்ளவர்களுக்கும் அவர்களுடைய ஆலோசனை கர்த்தாக்களுக்குமே உரிமையுண்டு. எனினும். சட்ட வரம்பிற்குட்பட்ட முறைகள் மூலம் பொது ஜனங்களுக்கு அவ்விஷயங்களையொட்டி அபிப்பிராயம் கூற உரிமையுண்டு. எனவே, ராணுவத்தை இந்திய மயமாக்குவது போன்ற விஷயங்களைப்பற்றி நிர்வாகப் பொறுப்புள்ளவர்களுக்கு ஆலோசனை கூறவும் சட்டசபைக்கு சௌகரியமேற்படும். சில குறிப்பிட்ட விஷயங்களில் ராணுவ நிர்வாகத்திற்கும், சிவில் நிர்வாகத்திற்கும் அன்னியோன்னிய சம்பந்தமிருக்கவேண்டும். இம்பீரியல் ராணுவக் கமிட்டியைப்போல், இந்தியாவிலும் ஓர் கமிட்டி ஏற்படுத்தவேண்டுமென சிலர் யோசனை கூறினார்கள். நிர்வாக விஷயங்களில் அக்கமிட்டியில் கலந்துகொள்ள வேண்டுமென சிலர் கூறினார்கள். ஷெ கமிட்டி செய்யவேண்டிய காரியங்களையே மந்திரி செய்து வரவேண்டும். அதாவது 1. ராணுவ மந்திரி முக்கியமாக கவர்னர் ஜெனராலுக்குத்தான் பொறுப்பாளி எனினும், ராணுவத்தையொட்டிய சில விஷயங்களில் அவர் சட்ட சபைக்கும் பொறுப்பாளியாக இருக்கவேண்டும். 2. ஷெ மந்திரி கவர்னர் ஜெனராலுக்கு பொறுப்பாளியெனினும் அவர் இந்தியராகவே இருக்கவேண்டும். அவரை சட்டசபையிலிருந்தே தேர்ந்தெடுக்கலாம். 3. மந்திரி சபைக்கு அவரை பொறுப்பாளியாகவே கருத வேண்டும். மந்திரி சபை விவாதங்களில் அவர் கலந்துகொள்ளலாம். அவருக்கு கூட்டுப் பொறுப்பு உரிமையுண்டு. ராணுவ சம்பந்தமல்லாத மற்ற விஷயங்களை யொட்டி சட்டசபையில் தோல்வி யேற்படாமல் அவரும் தமது பதவியை ராஜிநாமா செய்துவிட வேண்டுமென்றும் சிலர் யோசனை கூறினார்கள்.

மேற்கூறிய யோசனைகளில் எதிர்கால முன்னேற்றத்திற்கு மிகவும் இன்றியமையாத சிலவிஷயங்களிருக்கின்றனவெனினும், ராணுவ விஷயங்களுக்கு கவர்னர்ஜெனரல் பொறுப்பாளியாக இருக்கும்வரையில், மந்திரியை நியமிக்கும் பூரண அதிகாரமும் கவர்னர் ஜெனராலுக்குத்தான் உண்டு. எனவே, மந்திரியும், அவருக்கு மாத்திரம்தான் பொறுப்பாளியாக இருக்கவேண்டும். மந்திரிகளுக்கு பரஸ்பரமிருக்க வேண்டிய சம்பந்தமும், அவர்களுக்கும் சட்டசபைக்கும் இருக்கவேண்டிய சம்பந்தமும் கால தேச வர்த்தமானத்தையும் அரசியல் வழக்கத்தையும் அனுசரித்திருக்கும்படி விட்டுவிடலாம். ராணுவச் செலவை வருஷா வருஷம் ஓட்டுக்கு விடக்கூடாதென அபிப்பிராயமிருந்து வருகிறது. எனினும் ஓர் குறிப்பிட்ட காலத்திற்கு குறிப்பிட்ட தொகையை யொட்டி, அங்கீகாரம் பெற வேண்டும். அத்தகைய குறிப்பிட்ட காலத்துக்கு முடிவில், அவசர செலவை அனுமதிக்க கவர்னர் ஜெனராலுக்கு விசேஷ அதிகாரங்களிருக்க வேண்டும். அவ் விஷயத்தை யொட்டிய மற்ற விவரங்களை மீண்டும் ஜாக்கிரதையாக பரிசீலனை செய்யவேண்டும்.

#### வெளிநாட்டு சம்பந்தம்.

வெளிநாட்டு சம்பந்தமான விஷயங்களைப்பற்றி அறிக்கை கூறுவதாவது:— அன்னிய நாட்டு சம்பந்தங்களை யொட்டி ஓர் நிர்ணயம் செய்வது கஷ்டமான ஓர் விஷயமாக இருக்கிறது. இந்தியாவிற்கு வெளிநாடுகளுடனும், எல்லைப்புற பிரதேசங்களுடனும் அரசியல் சம்பந்தமானவிஷயங்களெல்லாம் ரிசர்வ் இலாகா அதிகாரத்தில் இருக்க வேண்டும். வர்த்தக சம்பந்தமான விஷயங்களும், பொருளாதார சம்பந்தமான விஷயங்களும் சட்ட சபை, மந்திரிகள் பொருப்பில் இருக்க வேண்டும். அதிலும் அரசியல் முறைகளுக்கு பாதகத்தை விளைவிக்கக் கூடிய விஷயங்களை யொட்டி கவர்னர் ஜெனராலுக்கு விசேஷ அதிகாரமிருக்க வேண்டும். அதாவது மேலே கூறிய விஷயங்களால் அரசியல் சம்பந்தத்திற்கு பாதகம் விளையக் கூடியதாக இருக்கும்பட்சத்தில். அதற்குற்ற முறைகளைக் கைக்கொள்ள கவர்னர் ஜெனராலுக்கு விசேஷ அதிகாரம் உண்டு. வெளிநாட்டு சம்பந்தமான நிர்வாகம் எந்த மந்திரியிடமிருந்தோ, அவருக்கும், அவரது சகாபாடிகளான "பொறுப்புள்ள" மந்திரிகளுக்கும் நெருங்கிய ஒத்துழைப்பு இருக்கவேண்டும். மேற்கூறிய 2 விஷயங்களை யொட்டியும், விவாதிக்கும்போது, பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகளில் சிலரும், முஸ்லிம் பிரதிநிதிகளும், திருப்தியான சமூக சமரசமேற்பட்டாலன்றி, விவாதத்தில் கலந்துகொள்ளுவதில்லை யெனக் கூறிவிட்டதால், அவர்களுடைய அபிப்பிராயத்தை தெரிந்துகொள்ள முடியவில்லை. மைனாரிட்டிக் கமிட்டியைச் சேர்ந்த சிலரும், தங்கள் அபிப்பிராயத்தைக் கூறவில்லை.

# மாகாண சுயாட்சி திருப்தியளிக்காது.

## மத்திய ஆட்சியையும் பெறவில்லை யானால் மீண்டும் போரே.

### வட்டமேஜை மகாநாட்டில் விவாதம்.

### பல தலைவர்கள் கருத்து.

பிரிட்டிஷார் மாகாண சுயாட்சி தான் வழங்குவார்களென்றும், மத்திய சர்க்காரின் பொறுப்பாட்சியை அளிக்கமாட்டார்களென்றும் இப்போது வட்டமேஜை மகாநாட்டுப் பிரதிநிதிகளுக்கு உறுதிப்பட்டு விட்டது. மகாத்மாவும் பிறரும் கூறியது போல மத்திய சர்க்கார் பொறுப்பும், பிறவும் பெறவில்லையானால் அந்த ஆட்சி சுயாட்சியேயல்ல. இக் கருத்தைக்கொண்டு பல கஷித் தலைவர்களும், பிற விஷயங்களில் அபிப்பிராய பேதமிருந்தாலும் மத்திய ஆட்சியைப் பொறுத்தமட்டிலும் ஏகோபித்துப் போராடுகிறார்கள்.

நவம்பர் 25-ந் தேதி மகாநாடு ஆரம்பித்தபோது தொழிற்கட்சி நிலைமையைப்பற்றி திரு. வீஸ் ஸ்மித் ஒரு சொற்பொழிவு நடத்தியதில் மத்திய சுயாட்சி பெற இன்னும் கொஞ்ச நாள் இந்தியா பொறுத்திருக்க வேண்டுமென்று குறிப்பிட்டபோது மகாத்மாஜி அடியில் வருமாறு பேசினார்:—

மாகாண சுய ஆட்சி, நான் கருதியுள்ள மாகாண சுய ஆட்சிப்படி இருந்தால், நான் அதை ஒப்புக்கொள்வதைப் பற்றி ஆட்சேபனையில்லை. ஆனால் இங்கு நடைபெற்ற விவாதத்தைக் கவனிக்குமிடத்து நான் கருதியுள்ள சுய ஆட்சியை சர்க்கார் அளிக்கப் போவதாகத் தெரியவில்லை. ஆகலால் இதைப்பற்றி எனது கருத்தைத் தெரிவிக்க என்னை வற்புறுத்தாது என்னைத் தனியாக விட்டு விடுங்கள். என்று நான் எனது நண்பர்களுக்குத் தெரிவித்தேன். முட்டாள்தனமாக மாகாண சுய ஆட்சியுடன் ஒத்துழைக்கவும், எதாவது நம் நாட்டிற்குப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்ற ஆத்திரத்தாலும் எனது நாட்டின் நலத்தை நான் விற்கத் தயாராக இல்லை யென்றும், ஒரு வரம்பிற்குட்பட்ட மத்தியப் பொறுப்பாட்சி எனக்குத் திருப்தியளிக்காதென்றும், நான் அவர்களிடம் தெரிவித்தேன். ராணுவம், நிதி இவைகளைப் பூர்ணமாக நிர்வகிக்கக் கூடிய பொறுப்பாட்சியையே நான் விரும்புகிறேன். அதை நாம் இப்பொழுது இங்கு பெறப் போவதில்லை யென்பதை அறிவேன். அதைக் கொடுக்க ஒரு பிரிட்டிஷாராவது தயாராக இல்லை யென்பதையும் அறிவேன். ஆகையால் நான் எனது நாட்டுக்குத் திரும்பி, திரும்பவும் என் நாட்டு ஜனங்களைத் தியாகம் செய்ய அழைக்க வேண்டுமென்பதையும் நான் அறிவேன். ஒருபுறம் பலமான மாகாண சுய ஆட்சியும், மற்றொருபுறம் வெளியார் கையிலுள்ள மத்தியப் பொறுப்பாட்சியும் ஒன்றுக்கொன்று மிகுந்த முரணான நிலைமையாகும். ஆதலால் மாகாண சுய ஆட்சியும், மத்தியப் பொறுப் பாட்சியும் ஒரே சமயத்தில் நிறுவப்பட வேண்டும் என்று நான் உணர்கிறேன். ஆனால் நான் கருதியபடியுள்ள மாகாண சுய ஆட்சியே வழங்கப்படப் போகிறதென்று என்னை யாராவது திருப்தி செய்வார்களேயாகில், நான் அதைக் கைக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

பிறகு, 26-ந் தேதி காலை மீண்டும் மகாநாடு கூடியபோது முஸ்லீம்கள் சார்பாக் திரு. ஜின்னா இவ்வாறு பேசினார்:—

#### திரு. ஜின்னா.

இந்திய அரசியல் அமைப்பின் முன்னேற்றத்திற்கு முஸ்லிம்கள் முட்டுக்கட்டை போடப்போவதில்லை. இதுசம்பந்தமாக நான் சென்ற மகாநாட்டில் பேசியிருப்பதை கவனிக்கவேண்டும். எவ்விதமான அரசியல் திட்டமும் வகுக்கப்படுவதற்கு முன்னதாக ஹிந்து முஸ்லிம் பிரச்னையின் முடிவு அவசியமென்றும், முஸ்லிம்கள் உரிமைகள் பாதுகாக்கப்பட்டாலன்றி அவர்கள் ஒத்துழைப்பையும் பெற்றுக் கொண்டாலன்றி, இந்தியாவில் புதிய அரசியல் திட்டம் 24மணி நேரத்திற்குகூட நிலைத்திருக்காது என்றும், நான் தெரிவித்திருக்கிறேன். அதே நிலைமைதான் இப்பொழுது இருக்கிறது. இந்தியாவின் அரசியல் முன்னேற்றத்திற்கு முஸ்லிம்கள் எவ்விதசங்கடங்களையும் ஏற்படுத்த விரும்பவில்லை. மகாண சுய ஆட்சிமட்டும் இந்தியாவின் மக்களை திருப்தி செய்யாது என்றே முஸ்லிம்களும் கருதுகிறார்கள். ஆனால் முஸ்லிம்களின் கோரிக்கைகள் நிறைவேற்றப்படாத எந்த அரசியல் திட்டமும் முஸ்லிம்களால் ஒப்புக்கொள்ளப்பட மாட்டாதென்பதை நினைவிலிருத்திக் கொள்ளுங்கள்.

பிரிட்டிஷ் இந்தியா சம்பந்தமாக முதலாவதாகப் பிரச்னைகளைத் துரிதமாக முடிக்கவேண்டியது அவசியம். அகில இந்திய ஐக்கிய அரசியல் அமைப்பு என்றமாய உருவத்தைப் பற்றிக்கொண்டும், நத்திக்கொண்டுமிருப்பதால் பயனில்லை. வகுப்புப் பிரச்னை சம்பந்தமாக மட்டுமென்று, இன்றும் சமரச முடிவு அவசியமாகவுள்ள எல்லா முக்கியமான விஷயங்களைப்பற்றியும் வழிகளைக் கண்டுபிடிக்கவேண்டியது சர்க்கார் கடமையேயாகும்.

#### சர். முகமதுஷாபி.

சர். முகமதுஷாபி பின் வருமாறு தெரிவித்தார்:—

வகுப்புப் பிரச்னை சம்பந்தமாக பிரிட்டிஷ் சர்க்கார் முடிவு செய்வார்கள். முஸ்லிம்களுக்கும், மற்ற மைனாரிட்டி வகுப்புகளுக்கும் பாதுகாப்பு அளித்து அரசியல் திட்டம் வகுத்தாகிவிட்டதென்று வைத்துக்கொண்டாலும், மாகாண சுய ஆட்சியுடன் நின்று விடாது, பிரிட்டிஷ் சர்க்கார் இன்னும் அதிகப்படியாகச் செல்லவேண்டும். அதாவது மத்தியப் பொறுப்பாட்சியும் வழங்கத்தான் வேண்டும்.

#### சர்தார் உஜ்ஜல் சிங்.

சர்தார் உஜ்ஜல் சிங், மாகாண சுயஆட்சியுடன் மத்தியப்பொறுப்பாட்சியும் வழங்கவேண்டுமென்றும் வகுப்புப் பிரச்னையை சர்க்காரே முடிவுசெய்து கொள்ளலாமென்றும் தெரிவித்தார்.

#### மாளவியா, ஐயங்கார்.

பண்டித மாளவியாவும், திரு. ரங்கசாமி ஐயங்காரும் மத்திய பொறுப்பாட்சியைக் குறித்து நடவடிக்கைகளை நடத்திச்செல்ல வேண்டுமென்று துரிதப்படுத்தினார்கள்.





# தபால் அறிக்கை.

### வெளிநாடுகட்குக் கட்டண உயர்வு.

#### முதல் ஔண்சுக்கு இரண்டரை அணு

டிசம்பர் 1 ந்தேதி முதல் சிலோனைத் தவிர இதர அயல் நாடுகட்கு அனுப்பப் பெறும் கடிதங்களின் மீதும், பார்சல்களின் மீதும் அதிகரிக்கப் பட்டிருக்கின்ற கட்டணம் அடியில் வருமாறு:—

ஐக்கியதேசங்கள், எகிப்து, பிரிட்டிஷாருக்குச் சொந்த நாடுகள் ஆகிய விடங்கட்கு முதல் ஒவ்வொரு ஔண்சுக்கும் இரண்டரை அணாவும், பின் ஒவ்வொரு ஔண்சுக்கும் இரண்டணா விகிதமும் கட்டப்பெறவேண்டும் ஒற்றைப் போஸ்டுக்கார்டுகள் இரண்டணா, ரிப்ளைக்கார்டுகள் நான்கணா. அச்சிட்ட காகிதங்கள் ஒவ்வொரு இரண்டு ஔண்சுக்கும் ஒன்பதுபைசா. அச்சிட்ட தொழில் சம்பந்தமானபத்திரிகைகட்கு முதல் எட்டு ஔண்சுக்கு மூன்று அணா; மேற்பட்ட ஒவ்வொரு இரண்டவுன்சுக்கும் ஒன்பது பைசா. சாம்பிள் பாக்கட்டுகட்கு முதல் நான்கு ஔண்சுக்கு ஒரு அணா ஆறுபைசாவும் கூடுதலான ஒவ்வொரு இரண்டவுன்சுக்கும் ஒன்பது பைசாவுமாகும்.

# அண்ணாமலை நகர்.

### நாராயணசாமி நாயுடுவின் பிரசங்கம்.

#### கிருஷிகர் பரிதாப நிலை.

அண்ணாமலைநகர் பொருளாதாரக்கழகத்தின் ஆதரவில் டாக்டர் பி. வி. நாராயணசாமி நாயுடு எம். ஏ. பி-காம். பி. எச். டி. பார்-அட்-லா நவம்பர் 25-ந்தேதிமாலை 5-மணிக்கு "கிராமப் பொருளாதாரம்" என்பது பற்றியோர் அரிய பிரசங்கம் செய்தார். பிரசங்கம் அஸபளி ஹாலில் நடைபெற்றது. பிரசங்கத்தில் டாக்டர் நாயுடு அவர்கள் தற்போதிய உழவர்களின் பரிதாப நிலைமையையும், தனவந்தர்களுடைய கையில் சிக்கி உழல்வதையும், உழவர்களுடைய நன்மைக்காகக் கடன் கொடுக்க ஏற்பாடுகள் நடைபெறவேண்டுமென்பதையும் வற்புறுத்தினார். அதற்கு உதாரணமாக மேனாட்டு நடைமுறைகள் எடுத்துக் காட்டப்பட்டன.

# பந்தயத்திற்குக் காலில்லை.

### பணங்கட்டியவர் பாடு திண்டாட்டமா?

#### கல்கத்தாவைக் கண்வைப்பதிலென்ன பிரயோசனம்?

சென்றவருடம் சக்கரவர்த்தி, வைசிராய் என்ற இருகப்புகளை வாங்கிய திரு. ஈவின் "இட்டலிஸ்" என்ற குதிரை செவ்வாய்க்கிழமை யன்று காலையில் வழக்கம் போல் ஓடும்போது கால் நொண்டியாகப் போய்விட்டது. இந்தவருடம் அந்தக் குதிரை யோடாது.

# திருவாங்கூர் தேவஸ்தான இலாகா

### திவானுக்கு மாற்றப்பட்டது.

இதுவரையிலும் தேவஸ்தான கமிஷனர் என்ற ஒருவர் கையிலிருந்து வந்த தேவஸ்தானம் இலாக தலைவர் பதவி, இப்போது புதிய மகாராஜாவினால் திவானுக்கு மாற்றப்பட்டிருக்கிறது.



# சுயமரியாதைத்தலைவர் உடல் நிலை.

(ஒரு நிருபர்)

உயர் திரு. ஈ. வெ. ரா. அவர்கள நேற்று இரவு மெயிலில் பெங்களூருக்கு (பூரண ஓய்வெடுத்து கொள்வான் வேண்டி) செல்வதற்காக ஜோலார் பேட்டையில் திரு. வரதராஜ முதலியார் பங்களாவில் தங்கிவிட்டு, திரு. முதலியாருடன் பெங்களூருக்கு செல்வார்கள். அவர் உடல் நிலை மிகவும் குணமாகவே காணப்படுகிறது. இன்று திருப்பத்தூரிலிருந்து பல முக்கிய அன்பர்கள் சென்று பார்வை யிட்டும் பேசியும் வந்தார்கள்.

# பகவத்சிங் பாட்டு.

### ஆசிரியருக்கு வாரண்டு.

தென்னார்காடு ஜில்லா மாஜிஸ்திரேட் மிஸ்டர் எ. ஆர். டபிள்யு. வெஸ்ட்லேக் ஐ. ஸி. எஸ். முடிவு, ஸி. ஐ. டி. இன்ஸ்பெக்டராகிய திரு. நடேசஐயர் கி. பி. கோ 124 பிரிவின்படி "பகவத்சிங் பாட்டு" என்ற புஸ்தகத்தின் ஆசிரியர் மீதும், பிரசுரகர் மீதும் ஓர் வழக்கைக் கொண்டுவந்தார்.

குற்றம் சாட்டப்பட்டவர்கள் ஆசிரியராகிய திருவாளர்கள் (மதுரை) நடராஜ பிள்ளையும், திருப்பாப்புலியூர் வாணிவிலாச புஸ்தக டிப்போ சொந்தக்காரராகிய திரு ராமலிங்கம் பிள்ளை (இவர்தான் பிரசுரகர்)யும், சென்னை மனோ ரஞ்சனி அச்சுக்கூடச் சொந்தக்காரராகிய ஸ்ரீமதி பட்டம்மாளு (அச்சிட்டோர்) மாம். மாஜிஸ்திரேட் வழக்கைப் பார்த்துவிட்டு வாரண்டனுப்பினார்.

# சென்னை சர்க்கார் சிக்கன கமிட்டிக்கூட்டம்.

### போலீஸ் இலாகாவில் 833 பேருக்கு வேலையில்லை.

சென்னை சர்க்கார் சிக்கனக் கமிட்டி கூட்டமொன்று நவ. 24-ந் தேதி சர்க்கார் காரியாலயத்தில் நடைபெற்றது. நிதி மந்திரி எச். ஜி. ஸ்டோக்ஸ் தலைமை வகித்தார். சிக்கனத்தை யொட்டிய போலீஸ் இலாகாவின் பரிசோதனை முடிந்தது. 10 லக்ஷம் ரூபாய் போலீஸ் இலாகாவில் சிக்கனம் செய்ய கமிட்டி சிபார்சு செய்திருக்கிறது. கமிட்டியின் சிபார்சு அமலுக்கு வரும் பட்சத்தில் 766 கான்ஸ்டேபிள்களும், 44 ஹெட்கான்ஸ்டேபிள்களும், 22 சப் இன்ஸ்பெகடர்களும், 1 சார்ஜெண்ட் முதலியவர்கள் வேலையிலிருந்து விலகும்படி நேரும். மலையாள விசேஷ போலிசையும் குறைக்க வேண்டுமென கமிட்டி சிபார் செய்திருக்கிறது.

# பொன்னமராவதி உபாத்திமைச் சங்கம்.

பொன்னமராவதி உபத்திமை சங்கத்தின் கூட்டமொன்று நாளிது நவம்பர் 22-ந் தேதி காலை 11 மணிக்கு ஸ்கூல் இன்ஸ்பெக்டர் திரு. வெங்கட்ராமய்யர் தலைமையில் நடைபெற்றது. தலைவர்கூட்ட ஆரம்பத்தில் ஆசிரியர்கட்கு இருக்கவேண்டிய குணங்களையும், மாணவர்களையவர்கள் நடத்தவேண்டிய முறைகளையும் பற்றி விரிவாகக்கூறினார். பின்னர், திரு. சிதம்பர பாகவதரவர்கள் தாமியற்றிய ராமதாஸ் நாடகத்திலுள்ள கடின பதங்களை ஆசிரியர்கள் எவ்வாறு போதிக்க வேண்டுமென்பதைப் பற்றிக் கூறினார். பிறகு அன்று மாலை பொன்னமராவதி டாக்டர் அவர்கள் வயிற்றுக் கடுப்பும், அதைத்தடுக்கும் முறையும் என்பதைப்பற்றி யோர் பிரசங்கம் செய்தார். அப்பால் ஆசிரியர் சங்கத்தின் வருடாந்தக் கூட்டத்தை டிசம்பர் 4-ந் தேதி நடத்தவேண்டுமென்று தீர்மானித்தார்கள்.

# ரோல்ஸ் ராய்ஸில் பெண்ட்லி.

### புதிய மோட்டாருற்பத்தி.

பெண்ட்லி மோட்டார் கம்பனியின் கடன் தனம் முதலியவற்றை ரோல்ஸ் ராய்ஸ் மோட்டார் கம்பனியார் எற்றுக் கொண்டார்கள். இனிமேல் பெண்ட்லி மாடல் கார்களை ரோல்ஸ் ராய்ஸ் கம்பெனியாரே செய்வார்கள்.

# பாட்மிண்டன் டோர்ணமெண்டுகள்.

#### நாச்சியார்புரம்.

சென்ற சில நாட்களாக இவ்வூர் மனோகர விலாஸ் பந்தடிமாவின் சார்பில் நடைபெற்றுவந்த பாட்மிண்டன் டபிள்ஸ் டோர்ணமெண்டின் பைனல் விளையாட்டு 25—11—31ல் நடைபெற்றது. வெளியூர்களிலிருந்து ஏராளமான வாலிபர்கள் விஜயஞ்செய்திருந்தனர். காரைக்குடி, திருவாளர்கள் அடைக்கப்பசெட்டியார், சேதுச்செட்டியார் ஆகிய இருவர்கள் ஒரு டீமாகவும், சொக்கலிங்கம்புதூர் எம். என். பிரதர்ஸ்என்னும் திரு. நாகப்பசெட்டியார் திரு. பொன்னழகப்ப செட்டியாராகிய இருவரும் ஒரு டீமாகவும் நின்று விளையாடினார்கள். காரைக்குடி டீம் வின்னர் கப்பையும், சொ. புதூர் டீம் ரன்னர்கப்பையும் பெற்றார்கள். வின்னராக வந்தவர்களை மாலையிட்டு ஊர்வலமாக அழைத்துச்செல்லப்பட்டார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

#### அரியக்குடி.

ஸ்ரீ இராம விலாஸ் பந்தடிமாவின் சார்பில் நடைபெற்றுவரும் டபிள்ஸ் டோர்ணமெண்டில் 28—11—31ல் இரண்டாவது ரவுண்டில் சொ, புதூர் பொன்னழகப்ப செட்டியாரும், வேகுப்பட்டி சேதுச்செட்டியாரும் சேர்ந்த எ. எஸ். கம்பானியன் டீமுக்கும், தேவகோட்டை, மாணிக்கஞ் செட்டியாரும் கானாடுகாத்தான் வேங்கடாசலஞ்செட்டியாரும்சேர்ந்த முருகவிலாஸ் டீமுக்கும் விளையாட்டு நடைபெற்றது. இன்று வெற்றி பெறுபவர்களுக்குத்தனிப் பரிசுகள் வழங்குவதாகப் பத்திரிகை மூலம் வெளியிடப் பட்டிருந்தபடியால் செட்டி நாட்டின் பலபாகங்களிலிருந்தும் சுமார் 500க்கு அதிகமான இளைஞர்கள் வந்திருந்தார்கள். காலை 7-மணிக்கு விளையாட்டு ஆரம்பமாகி 7 25-க்குள் முடிவடைந்துவிட்டன. எதிர்பார்த்த அளவு ஆட்டம் திருப்திகரமாகவில்லை. எ. எஸ். கம்பானியன் டீமும், முதற்கேம் 17 பாயிண்டிலும் இரண்டாவது கேம் 23 பாயிண்டிலும் முருக விலாஸ் டீமை தோற்கடித்தனர். குறிப்பிட்டபடி வெற்றியடைந்த எ. எஸ். கம்பானியன் டீமுக்கு வெள்ளி மெடல்கள் பரிசளிக்கப்பெற்றன என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

# சிவகெங்கை தாலுகா அரசியல் மகாநாட்டு ஆலோசனைக் கூட்டம்.

### மகாநாடு ஒத்திவைக்கப்பட்டது.

(மேது நிருபர்)

நவம்பர், 23—

சிவகங்கைத் தாலூகா அரசியல் மகாநாட்டின் ஆலோசனைக் கூட்டம் நேற்று காலை 10-மணிக்கு மதகுபட்டி சத்திரத்தில் கூடியது. சுமார் 300பேர்வந்திருந்தார்கள். அதுகாலை மகாநாட்டை டிஸம்பர் மாத முடிவுக்குள் நடத்தவேண்டும் என்ற தீர்மானம் ஆ. வி. சாமிநாதனால் கொண்டு வரப்பட்டது. 'டிஸம்பர் மாத முடிவு என்ற பகுதியை தாம் ஆட்சேபிப்பதாக எட் நாராயணய்யங்கார் கூறினார். சிறிது விவாதம் நடந்த பிறகு பகல் போஜனத்திற்காக கூட்டம் கலைவுற்றது. பின்னர் 2-மணிக்கு கூட்டம் ஆரம்பமாயிற்று. தீர்மானத்தை ஆதரித்து ஆ. சுப. சு. கரு. ஆவுடையப்பன், கணபதி, இருவர்களும் பேசினார்கள். ஆட்சேபித்து எ. கணபதி ஐயர், ஆர். ஸ்ரீநிவாஸவரதய்யங்கார், ஐ. டி. எப். சுந்தராஜய்யங்கார், சிதம்பர பாரதி முதலிய பார்ப்பனர்கள் பேசினார்கள். விவாதங்கட்கு திரு. சாமிநாதன் சரியான பதிலளித்தார். கூட்டத்தில் பார்ப்பனர் சிலரால் தூண்டப்பட்டவர்கள் கலகத்தை விரும்பினர். இதையறிந்து சாமிநாதன் கூட்டத்தில் பார்ப்பனர் சூழ்ச்சி அதிகப்பட்டுவிட்டதென்றும், அதனால் தீர்மானத்தை வாபஸ் வாங்கிக்கொள்வதாகவும் கூறி தீர்மானத்தை வாபஸ் வாங்கிக்கொண்டார். பின்னர் பெருத்த வருத்தத்தோடு கூட்டம் 5-மணிக்கு கலைவுற்றது. தீர்மானத்தை ஓட்டுக்கு விடமுடியாது என்று ஐயங்கார் கூறியது கண்டிக்கத்தக்கது.

# தேவகோட்டை,

### தாழ்த்தப்பட்டார் நிலை.

#### கள்ளர்களின் தொல்லை.

தேவகோட்டை, நவ. 26—

இராமநாதபுரம்ஜில்லா, தேவகோட்டை டிவிஷனில் பரமக்குடி, பாவனக்கோட்டை என்ற இரண்டு கிராமங்களிருக்கிறது. இக்கிராமங்களில் கள்ளர்கள், இடையர்கள், ஆதிதிராவிடர்கள், தேவேந்திர குலவேளாளர்கள் வசிக்கின்றனர். பரமக்குடியில் கள்ளர்களுக்கு ஓர் பள்ளிக்கூடமிருக்கிறது. அங்கு ஆதிதிராவிடர்கள், தேவேந்திர குல வேளாளர்களின் பிள்ளைகளைச் சேர்ப்பது கிடையாது. ஆகையால் தாழ்த்தப்பட்ட வகுப்பார் தங்கள் பிள்ளைகளின் பிரயோஜனத்திற்கென ஓர் பள்ளிக்கூடம் பாவனக்கோட்டையில் அமைத்து சடந்த இரண்டு மாதங்களாகப் படிப்பித்து வருகிறார்கள். இந்தப் பள்ளிக்கூடத்தை நிறுத்தாவிட்டால் பள்ளிக்கூடத்திற்கு நெருப்பு வைத்துவிடுவதாகக் கள்ளர்கள் பயமுறுத்தி வந்ததாகத் தெரிகிறது. ஆனால் தாழ்த்தப்பட்டார் இப் பயமுறுத்தலைக் கவனியாது பள்ளிக்கூடத்தை நடத்திவந்திருக்கிறார்கள். பக்கத்துக் கிராமங்களிலுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்புப் பிள்ளைகளும் சேர்ந்து இருபது பிள்ளைகளுக் கதிகம் படித்துவருகிறார்கள்.

இதனைக்கண்ட பல கள்ளர்களும், இடையர்களும் நவம்பர் மாதம் 22-ந்தேதி ஞாயிற்றுக்கிழமை அதிகாலையில் மேற்கூறிய இரண்டு கிராமங்களுக்குள் புகுந்து இப் பள்ளிக்கூடம் நடைபெற முயற்சியாளர்களாக விருந்த தாழ்த்தப்பட்டாரில் இருவரைப் பிடித்து மரத்தில் கட்டிவைத்து நன்றாய் அடித்தும், அவர்களின் இனத்தாரான பெண்களையும் ஆண்களையும் தடிகளால் அடித்துக் காயப்படுத்தினார்கள் என்றும், அப்புறம் பள்ளிக்கூடத்திலும், இரண்டு வீடுகளிலும் நெருப்பு வைத்து விட்டதாகவும், தேவகோட்டை போலீசுக்கு அதிகாலையில் அறிவிக்கப்பட்டு, போலீசார் அன்று இரவு போய் விசாரணை செய்து இருக்கிறார்கள். காயப்பட்டவர்கள் போலீசாரால் ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார்கள் என திருவாளர்கள் எஸ். ஆறுமுகம், ஏ. எஸ். ஜான் ஆகியவர்கள் தெரிவிக்கின்றனர்.

—திராவிடன்.

# சரஸ்வதி வாசகசாலை காரியதரிசியின் வேண்டுகோள்.

பொதுஜன சேவையே பெரிதென எண்ணி, காங்கிரஸ் கொள்கையை முற்றும் பின்பற்றி சில ஆண்டுகளாக உழைத்து வரும் சரஸ்வதி வாசகசாலையில் பொது ஜனங்கள் இலவசமாக படித்தின்புறும் பொருட்டு தினசரிப்பதிப்பு, வாரம் மும்முறைப் பதிப்பு, வாரப்பதிப்பு. மாதப்பதிப்பு முதலிய பத்திரிகைகள் பல வரவழைக்கப்படுகின்றன. வாசகசாலைபிரதிதினமும் காலை 9 மணி முதல் 11 மணி வரையிலும் மாலை 3மணிமுதல் 7மணிவரையிலும் திறந்திருக்கும்- அன்பர்கள் அனைவரும் வந்து படித்தின்புற வேண்டும் என காரியதரிசி திரு. கு. முத்து. பழனியப்பன், எழுதுகிறார்.

நன்கொடை:—பிரஜோற்பத்திஹ கார்த்திகை மாதம் 7ல இவ்வூர் நா. ராம. அ. அண்ணாமலை செட்டியாரவர்கள் வீட்டில் நடைபெற்ற ஸ்வீகாரப் புதுமை விசேஷத்தை முன்னிட்டு நமது வாசகசாலைக்கு ரூ. 5 (ஐந்து) நன்கொடை அளித்து உள்ளார்கள். அன்னார்க்கு எங்கள் நன்றி என்றும் உரியதாகுக. எனக் காரியதரிசி திரு. கு. முத்து. பழனியப்பன் அவர்கள் எழுதுகிறார்கள்.

(5-ம் பக்கத் தொடர்ச்சி.)

யதார். அக்காரில் இன்னொரு பெருங் குணமிருந்தது. அதாவது அதற்கு "ஹாரன்" தேவை யில்லை. அது 2 மயிலுக்கு அப்பால் வரும்போதே சத்தம் கேட்கும். இதைக்கேட்டு பலர் ஏளனம் செய்தார்கள்; என்றாலும் இரவில் திருடர்கள்கொண்டு போனாலும் சத்தத்தால் உணர்ந்துகொள்ளலாமென்பது அவர்களுக்குத்தெரியாது போயிற்று.

இவ்வண்ணம் கார் ஒன்று வாங்கி எல்லா விஷயமும் முடிந்தபிறகுஊருக்குப்போவதைப்பற்றி நானும் மனைவியும் யோசித்தோம். மனைவி ஊருக்குத்தான் போகவேண்டுமென்றாள். எனக்கும் இந்த காரை வாங்கிய பிறகு காரைக்குடியை விட்டுப் புறப்படுவதுதான் நலமென்றுதோன்றிற்று. ஏனெனில் கண்டோர்கேட்டோரெல்லாம் காருக்காக என்னைப் பற்பலவாறு ஏளனம் செய்யத் தொடங்கிவிட்டார்கள். ஒருவர் வந்து கொழும்புக்கு வாடகைக்கு விடுகிறாயா என்றார். இன்னொருவர் குன்றக்குடி மலையிலேற்ற என்னவேண்டுமென்றார். இன்னொருவர் வந்து ஹாரனும் எஞ்சினும் ஒன்றாயிணைத்து செய்த மோட்டார் இதுதானென்றார். வேறொருவர் பாடியை மட்டிலும் விலைக்குக் கொடுக்கலாமா வென்றார். பிறிதொருவர் கழுதையா மோட்டாரா வென்றார். இந்த அவமானம் பொறுக்க முடியவில்லை. ஆகையால் அதனை ஊருக்குக் கொண்டுபோவதே மேல் என்று நினைத்தேன்.

0 0 0

கார்த்திகை மாதம் 7-ந் தேதி ஊருக்குச் செல்வதென்று நானும் மனைவியும் முடிவு கட்டினோம். ஒரு வாரமாக அதற்கான பிரயத்தனங்கள் செய்யப்பட்டன. வீட்டுச் சாமான்கள் எல்லாவற்றையும் ஒழுங்குபண்ணி ரயிலில் அனுப்பிவிட்டு பிரயாணத்திற்கு வேண்டிய சில பாத்திரங்களையும் மூன்று பெட்டிகளையும் ஒரு சிறு நகைப்பெட்டியையும் மட்டிலும் வைத்துக்கொண்டோம். நகைப்பெட்டியில் சுமார் 320 ரூபாய்க்குள்ள சாமான்களிருந்தன. துணிமணிகளாக சுமார் 100 ரூபாய்க்கிருந்தது. ரூபாயாக 133 இருந்தது.

குறிப்பிட்ட 7-ந்தேதி வந்ததும் பெட்டி முதலியவற்றை காரில் போட்டுக்கொண்டு நாங்கள் புறப்பட ஆயத்தமானோம். நான் ஷர்ட்டுக் கோட்டு முதலியவற்றை எடுத்துப்போட்டு, கையில் ஒரு தடியும் ஏந்தித் தலையில் ஒரு பெரிய தலைப்பாகையும் தரித்து, மீசையை வாஸ்லையின் போட்டுத் திருகி விட்டு, நெற்றியில் ஒரு பெரிய சாந்துப்பொட்டு வைத்து, காதில் இரட்டைஷன் கடுக்கன்களை மாட்டி கம்பீரமாக ஒரு ஜமீந்தார்போல ஸிங்காரித்தேன். என் மனைவியும் விளக்கெண்ணெய் ஸ்நானம் செய்து முகத்தில் மஞ்சளும் தாராளமாகப்பூசி தலையை சீவிக் கொண்டைமுடித்து, பூவணிந்து, நெற்றியில் குங்கும திலகம் சாத்தி நகைக ளெல்லாவற்றையும் எடுத்துத்தரித்து, ஓர் பட்டை இடுப்பில் கட்டி, ஒரு கருப்பு ரவுக்கையும் போட்டு, ஒரு சிறு ஜமீந்தாரிணி போல மகிழ்ச்சி நிறைந்ததோற்றத்தோடு விளங்கினாள், என் குழந்தைக்கும் விளக்கெண்ணெயபிஷேகம் செய்யப்பட்டு அலங்காரம் செய்யப்பட்டிருந்தது.

இவ்வண்ணம் நாங்கள் மூவரும் (நான், மனைவி, குழந்தை) அலங்காரம் செய்து காரில் பின் சீட்டி லுட்கார்ந்தோம். வீட்டில் கொண்டு எங்களைச்சேர்ப்பதற்கு 20 ரூபாய் வாங்கிக்கொள்வதாக ஒப்புக்கொண்ட ஒரு டிரைவர் முன் சீட்டிலுட்கார்ந்து காரையோட்ட ஆரம்பித்தார். நல்லவேளையாக கார் கோளாறொன்றும் செய்யாமல் ஸ்டார்ட் செய்த கொஞ்ச நேரத்துக்குள் ஓடலாரம்பித்தது. நாங்கள் பக்கத்தில் நின்று வழியனுப்பிய நண்பர்களுக்குவிடை கொடுத்துப்புறப்பட்டோம். புறப்பட்டது ஒரு பிரமாதமான காரியமானாலும் கார் சென்ற வேகம்மணிக்கு சுமார் $5\frac{1}{4}$ மயிலே. இதனைக்கண்டு பின்னால் நின்றவர் கைகொட்டிச்சிரித்தார்கள். எவர் எப்படிச்சிரித்தாலும் இதுதானே கடைசித்தடவை யென்றெண்ணி நாங்கள் மேலே சென்றோம்.

டிரைவர் மிகுந்தநீக 'கியரை' இழுத்திழுத்துப்போட்டார். காலால் எதை எதையோ மிதித்தார். கையாலும் சில ஆணிகளை அழுத்தினார். என்ன செய்தும் வண்டி $5\frac{1}{4}$ மயில் வேகத்துக்கு மேல் ஓடவில்லை. இது ஒரு அவமானமாகவும் ஆசா

# ஒற்றைக்கால் முத்தம்மாள்.

பங்கமாகவும் தோற்றினாலும் வழியில் ஒரு தடவையாவது "ஹாரன்" ஊதாமல் போனது எனக்கு மிகுந்த திருப்தியை யளித்தது. கார் எவ்வளவு பின்னாடி வந்தாலும் முன்போகிற அனைவரும் திரும்பித் திரும்பிப்பார்த்தே வழி நடந்தார்கள். அதோடு பூமிக்கும், கார்போகுந்தோறும் ஒரு குலுக்கம் ஏற்பட்டது.

இப்படியே நாங்கள் திருப்பத்தூரைக் கடந்து 5 மைல் மேற்கே போனதும்—அதாவது நண்பகல் 12 மணிக்கு—கார் ஒரு ஆலமரத்தடியில் சென்று நின்றுகொண்டு மேலே போகமாட்டேனென்றது. டிரைவர் கூடியவரையிலும் அதனைத் தடவிக்கொடுத்துப் பார்த்தார். அது நகரவில்லை. கீழே இறங்கி ரேடியேட்டரை திறந்து உள்ளே பரிசோதனை செய்தார். பின்னால் வந்து சில குழாய்களைப் பார்த்தார். எல்லாம் சரியாக விருந்தன. ஆனால் கார் மட்டிலும் ஆலமரத்தடியை விட்டுக் கடரவில்லை. இயந்திரங்களும் சுற்றின. இதனைக்கண்டு என் மனைவி "இத்தனைநேரம் வெயிலிலேயே வந்ததல்லவா? நிழலைப் பார்த்ததும் இளைப்பாற நினைக்கின்றது போலும்" என்று கூறி என்னை தேற்றப்பார்த்தாள். இவ்வுரைகள் டிரைவருக்கு ஏற்கனவே இருந்த எரிச்சலை அதிகப்படுத்தியது. அவர் முணு முணுக்கத் தொடங்கினார், எனக்கு அவர் ஏதுவேனும் மன வருத்தங்கொண்டு "போகட்டுமையா எனக்கு உன் ரூபாயும் வேண்டாம்; ஒன்றும் வேண்டாம். என்னால் முடியாது" என்று காரைப்போட்டுவிட்டுப் போய்விடுவாரோ வென்ற பயம் குடியையப்பிடித்தசைத்தது. என்றாலும் நான் போட்டிருந்த ஜமீன்தார் வேஷத்தை விட்டுவிடாது கம்பீரமாகக் கீழே இறங்கி நின்று டிரைவருக்குச் சில புத்திமதிகள் கூறினேன். அவர் முகத்திலெல்லாம் வியர்வை ததும்ப எதெதுவோ செய்து பார்த்துவிட்டு இறுதியில் "காருக்கு அதிலேற்றியிருக்கும் பாரத்தை இழுக்கமுடிய வில்லை போலிருக்கிறது. சிறிது பெட்டி பாத்திரங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கீழேவையுங்கள். பரிக்ஷார்த்தமாக ஓட்டிப் பார்ப்போம்." என்றார். நானும் அதுவே கார் ஓடாமலிருப்பதற்குக்காரணமா யிருக்கலாமென்று துணிந்து பெட்டிகளை யெல்லாம் கீழே இறக்கிப் போட்டேன். பிறகு காரை ஸ்டார்ட் செய்தார். அது ஓடத்தொடங்கியது. சோதனையாக நானும் மனைவியும் குழந்தையும் ஏறி உட்கார்ந்தோம். டிரைவர் காரைவிட்டார். நன்றாக ஓடிற்று. அப்போது எங்களுக்கு வந்த சந்தோஷத்தைக் கூற முடியாது, மனைவி "ஆ! இப்போது பாருங்கள் எவ்வளவு விரைவாகப் போகின்றது? சுமார் 30 மையில் வேகமாகவிருக்கலாம் போலிருக்கிறதே இப்போதுதான் நமது கார் உண்மையான காரைப்போல் செல்லுகிறது" என்றாள். எனக்கும் அப்படியேதான் தோன்றிற்று. டிரைவரும் கொஞ்சம் சந்தோஷமடைந்தார். கார் வேகப்போயிற்று. சற்றேறக்குறைய சங்கரப்பட்டிக்குச் சமீபம் போனதும் என்னமோ ஞாபகம் வர மனைவி "ஐயோ பெட்டிகளெங்கே, கார் ஓடிய சந்தோஷத்தில் பெட்டியைப் போட்டுவிட்டல்லவா வந்து விட்டோம்?" என்று வானமும் பூமியும் குலுங்கக்கத்தினாள். நானும் உளமுடைந்து, திடுக்கிட்டு, மயங்கித் தளர்ந்து நைந்து "ஆ எத்தனை மாதங்களாக அரும்பாடுபட்டு சமபாதித்தேன்! ஐயோ! தொலைந்ததே" என்று அலறி வயிற்றில் வயிற்றிலடித்தேன். அடித்துக்கொண்டே வழியில் கிடந்தாலென்ன பிரயோசனம்? தேடிப்போய்ப்பார்த்தாலல்லவா கிடைக்கும்? பார்ப்பதற்கு என்னவழி? என் காரைத் திருப்பிக்கொண்டு போவதென்றால் முடியுங்காரியமல்ல.

இப்படியே யோசித்துக் கொண்டிருக்க அங்கு ஓர் மதுரைக்கார் (பஸ்) வந்தது. அதிலேறிப் போய்ப் பார்த்தேன். இந்த ராமனாதபுரம் ஜில்லாவிலா கீழே போட்ட பொருள் கிடைக்கும்? பெரும் பெரும் மனிதர் என்பவர்களே கிடந்து புரள்கின்றார்கள். காட்டில் போடப்பட்டவைகளா கிடைக்கும்? என் பெட்டிகள் எங்கேயோ போயின. நான் ஏங்கினேன். அழுதேன். கண்ணீர் சிந்தினேன். எனது பொல்லாத காலத்தை எண்ணி யெண்ணி உருகினேன். என் செய்துமென்ன? கடைசியில் வழியில் விட்டுவந்த மனைவியையும், பெட்டியைக் கொண்டுபோன மாதிரி, டிரைவர் கொண்டுபோய் விடலாகாதென்று எண்ணியொரு மதுரை சர்வீசிலேறி விரைந்து சென்றேன். நல்ல வேளையாக மனைவி போகவில்லை, அவளும் டிரைவரும் கொஞ்சிக்கொண்டுதானிருந்தார்கள். என்னைக் கண்டதும் சம்பாஷணையை முடித்துவிட்டுப் புறப்படத் தயாரானார்கள். நான் அந்தவயிற்றெரிச்சலில் பெட்டியின் கதையை அறவேமறந்து விட்டேன். மனைவியும் வெட்கி சேட்காதிருந்துவிட்டாள்.

கார் மீண்டும் ஓட்டப்பட்டது. இந்தத் தடவை டிரைவர் கொஞ்சம் விரைவாக விட்டார். மாலை 6மணிக்கு நாங்கள் உப்பாற்றுப் பாலத்துக்குச் சமீபம் போய்ச்சேர்ந்தோம்.

அந்த ஆற்றில் நிரம்பத்தண்ணீர் நின்றது. கடல்போல் பரந்திருந்த ஆறும், அதன் நடுவில் காணப்பட்டரோடும், அதில் ஊர்ந்து சென்ற மோட்டாரும் பார்ப்பதற்கு அழகாயிருந்தது. ஆனால் ஆற்றுப்பாலத்துக்குச் சமீபம் போனதும் டிரைவர் "ஆ! ஆ!" வென்று கத்தினார். நான் பயந்து "என்ன, யென்ன" வென்று பார்த்தேன். அவர் பிடித்திருந்த "ஸ்டீயரிங் வீல்" கையோடு வந்துவிட்டது. ஸ்டீயரிங் வீல் வந்துவிட்டால் காரையோட்டுவது எப்படி? அவர் வீலை அப்பால் எறிந்துவிட்டு அதன் நடுவிலிருந்த ஒரு குழலைப் பிடித்தார். குழாயும் கையோடு வந்துவிட்டது. உடனே பிரேக்கை அழுத்தப் பார்த்தார். முன் சக்கரத்தில் என்னவோ இடறி "தடால்" என்று ஒரு சத்தம் கேட்டது. டிரைவர் திடீரென்று கீழே குதித்துத் தப்பினார். கார் ஆற்றுக்குள் "தொப்"பென்று விழுந்தது. என் மனைவி முன்னும் நான் பின்னும் கார் எங்களிருவர் பின்னுமாகக் கீழே விழுந்தோம். ஆ! எப்படியிருக்கும்? என் மனைவி "ஆ! பாவி இதுவா மோட்டார். நான் முதலிலேயே வேண்டாம் வேண்டாமென்றேனே; வீணாகக் கெடுத்தாயே" என்றாள்." இவ்வளவு தான்; பின் என்ன நடந்த தென்பது தெரியாது.

0 0 0

கார்த்திகை 13-ந் தேதி நானும் மனைவியும் குழந்தையும் மதுரை தருமாஸ்பத்திரியில் கிடந்தோம். எனக்கு உடம்பிலுள்ள காயம் எல்லாம் குணப்பட்டு எழுந்திருக்க முடிந்தது. குழந்தைக்கு அபாயமில்லை. மனைவிக்கு ஒருகால் முறிந்து போயிற்று. எங்கள் பக்கத்தில் டிரைவர் உட்கார்ந்திருந்தார். அவர் தான் எங்களைத் தண்ணீரிலிருந்து காப்பாற்றி மதுரைக்குக் கொணர்ந்து சிகிச்சித்தாராம். அவரிடம் காரை எங்கே என்றேன். அதற்கு அவர் மேற்படி ஆற்றில் காரின் ஒரு பகுதி தான் விழுந்தது என்றும், இன்னொரு பகுதி ரோட்டில் கிடந்ததென்றும், ரோட்டில் கிடந்த பாகம் வெறும் டாப்பே யென்றும், அவைகளிரண்டும் போலீஸ் ஸ்டேஷனிலிருக்கின்றனவென்றும் கூறினார். எனக்கு நாணமும் வெட்கமும் பொறுக்க முடியவில்லை. ஆகவே ஒரு வார்த்தையேனும் வாயைவிட்டு வெளிவரவில்லை.

கடைசியாக நாங்கள் வீடு சேர்ந்தோம். என் மனைவியை எல்லோரும் ஒற்றைக் கால் முத்தம்மாள் என்றார்கள். எனக்கு "மோட்டார்" என்று பெயர் வைத்தார்கள். இவ்வளவு தான் எங்களுக்குக் காரைக்குடியிலிருந்து கிடைத்தவை.







## சென்னை கெஜட்.

17—11—31.

சென்னை கவர்னர் நவம்பர் 21-ந்தேதி சென்னையிலிருந்து புறப்பட்டு டில்லிக்குப்போவார். டிசம்பர் 3-ந்தேதி திரும்பி வருவார். வழியில் டிசம்பர் 1-ந்தேதி ஆந்திர ஸர்வகலாசாலையின் பட்டமளிப்பு விழாவிற்குச்செல்லுவார். டில்லியில் ராஜப்பிரதிநிதி மாளிகையில் அவருடைய விருந்தாளியாகத்தங்கியிருப்பார்.

### புஸ்தகங்கள் பறிமுதல்.

சென்னை வள்ளியம்பதி சங்கம் கே. டி. ஆர். வேணுவால் எழுதப்பட்டு பேபி அச்சுக்கூடத்தில் எம். தேவராஜமுதலியாரால் பிரசுரிக்கப்பட்ட சத்தியாக்ரகப்பாட்டு 1, 2-ம் பாகங்கள் ராஜத்துவேஷமான விஷயமடங்கியிருப்பதாகச் சபையோடு கூடிய கவர்னர் அதை பறிமுதல் செய்ய உத்திரவிட்டிருக்கிறார்.

மதுரை குற்றாலம் பிள்ளையால் எழுதப்பட்டுச் சென்னை அமிர்தகுண போதினி அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டு ஷண்முகானந்த புஸ்தகசாலை கே. ஏ. மதுரை முதலியாரால் வெளியிடப்பட்ட செந்தமிழ் மஞ்சரி முதல் பாகத்தைப் பறிமுதல் செய்யுமாறு அச்சுச் சட்டத்தின்படி சபையோடு கூடிய கவர்னர் உத்தரவிட்டிருக்கிறார்.

சென்னை எம்பிரான் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டு வி. ஆர். ஏழுமலைப் பிள்ளையால் வெளியிடப்பட்டபகத்சிங் கீர்த்தனாமிருதம் முதல் பாகம்ராஜத்துவேஷமான விஷயமடங்கி யிருப்பதாகப் பறிமுதல் செய்யுமாறு சபையோடு கூடிய கவர்னர் உத்தரவிட்டிருக்கிறார்.

### சட்ட இலாகா.

பின்கண்டவர்கள் கௌரவ பெஞ்சு மாஜிஸ்திரேட்டுகளாக நியமிக்கப்பட்டிருக்கின்றனர்:—

ஸ்ரீமான் என். சோலையப்பன் ராமனாதபுரம் ஜில்லா கமுதி.

ஜனாப் கே. பி. மகமது இப்ராகிம் ராவுத்தர் ராமனாதபுரம் ஜில்லா முதுகுளத்தூர்.

பத்திரப்பதி விலாகாவில் அனந்தப்பூர் ஜில்லாவென்பது டிசம்பர் 1-ந்தேதிமுதல் எடுக்கப்பட்டு பெல்லாரி ஜில்லாவுடன் இணைக்கப்பட்டுவிடும். கடப்பை ஜில்லா எடுக்கப்பட்டு சித்தூர் ஜில்லாவுடன் இணைக்கப்பட்டுவிடும். ஈரோடு ஜில்லா எடுக்கப்பட்டு கோயமுத்தூர் ஜில்லாவுடன் இணைக்கப்பட்டுவிடும். பாலக்காடு ஜில்லா எடுக்கப்பட்டுக் கள்ளிக்கோட்டை. ஜில்லாவுடன் இணைக்கப்பட்டுத் தென்மலையாள ஜில்லா வென்று பெயர் பெறும்.

### ஸ்தல சுய ஆட்சி இலாகா.

ஸ்ரீமான் எ. ராமஸ்வாமி முதலியார் சென்னை ஸர்வ கலாசாலை செனேட்டால் சென்னைக் கார்ப்பொரேஷன் கவுன்சிலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.



## ரப்பருக்குக் கதிமோக்ஷம்.

### மலாய் நாட்டிற்கு நல்ல காலம்.

### ருஷியாவும் அமெரிக்காவும் ஏராளமான ரப்பரை வாங்குகின்றன.

லண்டன், லிவர்பூல் இவ்விடங்களிலிருந்த ரப்பரை அமெரிக்காவும், ருஷியாவும் வாங்குகிறது. அதனால் சென்ற 3வாரத்தில் 3000டன்கள் லண்டன் ஸ்டாக்கில் குறைந்துவிட்டது. இந்தவாரத்திற்கு ருஷியா 1600 டன் ஏற்றுமதி செய்யப்போகிறது. கிருஸ்து மஸ்க்குள் ருஷியா இன்னும் 8000 டன் ரப்பரை வாங்குமெனவும் தெரிகிறது. அத்துடன் 1932ம் ஆண்டிற்கு ருஷியா 30,000 டன் ரப்பரை வாங்குமென கணக்கிடப் படுகிறது. ஆகவே கேட்பாரற்றுக் கிடந்த ரப்பருக்கு ஓர் வழி ஏற்பட்டுள்ளது மலாய் நாட்டின் அர்திஷ்டமேயாகும்.

### காந்திஜியின் சுற்றுப்பிரயாணம்:

**டிசம்பர் 2-ந்தேதி இங்கிலாந்திலிருந்து ஐரோப்பாவுக்கு புறப்பாடு.**

திரு. காந்தி ஜலதோஷத்தினின்றும் குணமடைந்துவிட்டதால் அவர்ஐரோப்பாவுக்கு டிசம்பர் 2-ந்தேதி இங்கிலாந்தை விட்டுச்செல்வார்.

### இராமநாதபுரம் ஜில்லா ஆசிரியர் சங்கம்.

இதன் 1931-32-ம் வருஷத்து இரண்டாவது மகாசபைக் கூட்டம் இராமநாதபுரம் இராஜா ஹைஸ்கூலில் 14-11-31ல் ஸ்ரீமான் என். சக்கரவர்த்தி அய்யங்கார் தலைமையில் கூடிற்று. அநேக இடங்களிலிருந்து 50 பிரதிநிதிகள் வரை வந்திருந்தார்கள். முக்கியமாக ஜில்லாக் கல்வி இலாகா உத்தியோகஸ்தர் உயர்திரு ஜி. தாமோதர முதலியாரவர்கள் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. முதலில் ராஜா ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் டி. எஸ். வீரராகவாசாரியார் பிரதிநிதிகளை வரவேற்றுப் பேசிய பின்னர், விருதுநகர் உதவி ஆசிரியர் திரு. எஸ். பி. பாண்டியன் "மாணவர்களைப் பரீக்ஷித்து மார்க்குகள் கொடுக்கும் குறிக்கோட்கள்" என்னும் பொருள்பற்றி ஆங்கிலத்தில் வெகு அழகாகப் பேசினார். மேற்படி சங்கக் காரியதரிசி ஸ்ரீமான் எஸ். தண்டபாணி அய்யர் ஷேக்ஸ்பியர் நாடகத்தில் சில சீன்கள் நடித்துக் காண்பித்தது அங்கு குழுமியிருந்த மக்களைக் களிப்புறும்படி செய்தது. அடியிற்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாய் நிறைவேற்றப்பட்டன.—(1) சர்க்கார் இன்ஸ்பெக்டர்களைத் தேர்ந்தெடுத்து நியமிப்பதில் 100-க்கு 30 பேர்களையாவது சர்க்கார் அல்லாத ஸ்கூல் ஆசிரியர்களை தேர்ந்தெடுக்கும்படி வேண்டுகிறது. (2) ஸ்கூல் பைனல் பரீக்ஷையில் ஒவ்வொரு பிரதம பரீக்ஷாதிகாரி கொடுக்கும் போதனைகளை ஒவ்வொரு ஸ்கூலுக்கும் சப்ளை செய்யும்படி ஸ்கூல் பைனல் போர்டை வேண்டுகிறது. (3) ராமநாதபுரம் ஜில்லா உயர்தரக் கல்விச் சங்கத்தில் தலைமை ஆசிரியர்களுக்கு இரண்டு ஸ்தானங்களும், உதவி ஆசிரியர்களுக்கு இரண்டு ஸ்தானங்களும் கொடுக்கும்படிக்கும் ஓட்டுகள் பொதுவாயிருக்கும்படிக்கும் மானேஜர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஏற்படும் தாவாக்களைத் தீர்த்து வைக்க இச்சங்கத்திற்கு அதிகாரம் கொடுக்கும் படிக்கும் வேண்டுகிறது. (4) இந்த ஜில்லாவிலுள்ள எல்லா ஸ்கூல்களும் ஜில்லா பந்தயப்போட்டி விளையாட்டுகளில் அதிகச் செலவில்லாமல் இலேசாய்க் கலந்து கொள்ளத்தக்க வழிகளும் உபாயங்களும் யோசனைகளும் சொல்ல அடியிற்கண்டவர்களைக் கமிட்டி மெம்பர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறது:—

பிரஸிடெண்டு ஸ்ரீமான் என். சக்கரவர்த்தி அய்யங்கார், ஸ்ரீமான்கள் எஸ். தண்டபாணி அய்யர், வி. ராமச்சந்திரய்யர், என்.எஸ். வெங்கடராமய்யர், பி. எஸ். சுந்தராஜய்யங்கார். பின்னர் பிரதிநிதிகளுக்கு ராஜா ஹைஸ்கூல் ஆசிரியர் சங்கத்தினதாவில் ஓர் நல்விருந்து அளிக்கப்பட்டது. தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் டி. எஸ். வீரராகவாசாரியார் எடுத்துக்கொண்ட நன் முயற்சி யாவராலும் பாராட்டப்படுகிறது.

### நவஜவான் பாரத சபை தலைவர் மீது வழக்கு.

**பதினாயிரம் ரூபாய் ஜாமீன்.**

நவஜவான் பாரதசபையின் தலைவராகிய சாந்திப்பிந்திதாஸ் அவர்கள் ராஜத்துரோகமாகப்பேசினார் என்ற குற்றம் சாட்டப்பட்டு நடக்கிறவழக்கில் மாஜிஸ்திரேட் மிஸ்டர் டிஸ்னி 10 ஆயிரம் ரூபாய் ஜாமீன் கேட்கிறார். இத்தொகையைக்கொடுக்கத்தவறினால் ஒரு வருட கடுங்காவல் தண்டனை யடையவேண்டுமோம். ஜாமீன் கட்டப்பட்டுவிட்டது.

### பிரிட்டிஷ்இந்திய பாஸ்போர்ட்.

**இந்திய சர்க்கார் கட்டணத்தை உயர்த்தினர்.**

பிரிட்டிஷ் இந்திய பாஸ் போர்ட் கட்டணத்தை 6 ரூபாயாகவும், புதுப்பிப்பதை 2 ரூபாயாகவும் இந்திய சர்க்கார் டிசம்பர் முதல் தேதி முதல் உயர்த்தியிருக்கின்றனர்.

## பொன்மலையில் சிக்னம்

**வெள்ளிக்கிழமைகளில் சில ஷாப்புகள் மூடப்படுகின்றன.**

**2520 பேருக்கு வேலையில்லை.**

திருச்சி, நவம். 27—

பொன்மலை தொழிலாளர் நிலைய மானேஜர், நிலையத்தில் வேலை செய்யவேண்டிய சமயத்தைப்பற்றி அடியில் வருமாறு ஒரு உத்தரவிட்டிருக்கிறார்:—

வெள்ளிக்கிழமையிலும் அதிலிருந்தும் அடியில் வருகிற இலாகாக்கள் இன்னொரு உத்தரவு வருகிற வரையிலும் வேலை செய்யாது:—(1) செம்பு வேலை செய்வோர், (2) கட்டுவோர், (3) சக்கர வேலைக்காரர்கள், (4) பாயிலர்கள், (5) டெண்டர்கள், (6) பாட்டர்ன், (7) மெஷின் சம்பந்தப்பட்டவர்கள்.

(இதற்கு முன் வெள்ளிக்கிழமைகளில் வேலை செய்துகொண்டிராத பகுதிகள், (1) வாகன், (2) காரேஜ்பாடி, (3) வான்.)

மேலே சொன்ன பகுதிகளோடு கீழ் வருபவைகளும் இனியொரு உத்தரவு வருவதுவரையிலும் வேலை செய்யாது:—(1) மெஷின் ஷாப், லோகோ திட்டத்தில் வேலை செய்துகொண்டிருக்கும் எல்லா மெஷின் வேலைக்காரர்களும் வியாழக்கிழமை மாலையிலேயே வேலையை முடித்துவிடவேண்டும். (2) யார்டு காங்—இவர்களும் (இரண்டு கூலிகளையும் அதனை நடத்தும் ஒரு டிரைவரையும் தவிர) வியாழக்கிழமையிலேயே வேலையை நிறுத்திவிடவேண்டும். (3) ஷண்டிங் எஞ்சின் ஒன்று மட்டிலும் வெள்ளிக்கிழமையோடிக்கொண்டிருக்கும். (4) வெள்ளிக்கிழமைகளில் ஆவி டிராவர்ஸர் ஓடாது; மின்சார டிராவர்ஸர் மட்டிலுந்தான் ஓடிக்கொண்டிருக்கும். (5) எஞ்சினீயரிங் ஷாப். இதில் ஈரோடு ப்ளெட்லேட் கோபுரத்தில் வேலை பார்ப்பவர்களைத் தவிர மற்றையோர் வியாழக்கிழமையிலேயே வேலையை நிறுத்திவிடவேண்டும் (6) ஸேல் அறை—இதுவும் வியாழக்கிழமை மாலையில் மூடிவிடும்.

இவ்வுத்தரவுக் கேற்ப சென்ற 27-ந்தேதி வேலை நடக்கவில்லை. இதனால் வேலையில்லாமற் போனவர்கள் 2,520. இவர்கள் ஒவ்வொருவரும் தினந்தினம் சம்பளம் கொடுக்கப்பட்டவர்களாம். சார்ஜ்மானுக்கும், போர்மானுக்கும் வேலை செய்தாலும் செய்யாவிட்டாலும் சம்பளம் கிடைக்கும்.

## புதுவயல்.

### பஞ்சாயத்து போர்டு.

(நமது நிருபர்.)

நவம்பர், 22—

20—11—31-ந் தேதி பஞ்சாயத்து போர்டின் சாதாரணக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அப்பொழுது பிரஸிடெண்ட், திருவாளர்கள் சோமசுந்தரம் செட்டியார், நல்லையா, லெக்ஷுமணன் செட்டியார் ஆகிய நால்வரும் ஆஜராயிருந்தனர். ஏகப்ப செட்டியார் மெம்பர் ஸ்தானத்தை ராஜிணுமா செய்தது அங்கீகரிக்கப்பட்டது. 32-33-ம் வருஷத்துக்கு வரும்படி ரூ. 9005 என்றும், செலவு ரூ. 8514 என்றும் தயாரிக்கப்பட்ட பட்ஜட்திட்டம் வாசிக்கப்பட்டு ஒப்புக்கொள்ளப்பட்டது. தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்திரேட் கோர்ட்டில் நடந்த அப்பீல்களுக்கு வக்கீலுக்கு ரூ. 129 சாங்ஷன் செய்யப்பட்டது. குப்பை கூட்டிகளுக்கு முன் கொடுத்த சம்பளத்தைக் காட்டிலும் ரூபா ஒன்று ஜாஸ்தி செய்யப்பட்டது. எ. பெரி. வீட்டு வாசல்படியும் திரு. ரெங்கசாமி ஐயங்கார் வீட்டு வாசல் படியும் என்குரோச்மெண்டு என்று பிராஸிகூஷன் செய்து திருப்பத்தூர் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் எ. பெரி. வுக்கு ரூ. 30-ம் திரு. ரெங்கசாமி ஐயங்காருக்கு ரூ.30-ம் அபராதம் விதிக்கப்பட்டது. அதன் பேரில் இவர்களிருவரும் தேவகோட்டை சப் கலக்டரிடம் அப்பீல் செய்து கொண்டதில் கீழ்க்கோர்ட்டு உத்தரவை ஊர்ஜிதம் செய்துவிட்டார். அதன் பேரில் ஹைக்கோர்ட்டில் அப்பீல் செய்திருக்கின்றனர். அதை எதிர்வாதம் செய்வதற்கு சாங்ஷன் செய்யப்பட்டது. பிள்ளையார் கோவில் ஊரணி டிரஸ்டிகள் ஆயிரம் ரூபாய் டாமேஜ்ஜுக்கு கொடுத்திருந்த நோட்டீஸை ரிகார்டு செய்வதென்றும், கேஸ் போட்டால் எதிர்வாதம் செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டது. சு. வீர. அரு. சுப்பிரமணியன் செட்டியார் தன்னிடம் இப்போர்டு அங்கத்தினர் சொக்கலிங்க முதலியார் லஞ்சம் கேட்டதாக கொடுத்திருந்த நோட்டீசும், அதை திரு. நல்லையாவுக்கு விசாரிக்கும்படி போட்டு அதன் பேரில் திரு. நல்லையாவின் ரிபோர்ட்டும் யோசிக்கப்பட்டு இதில் கண்ட விஷயம் உண்மை என்று போர்டார் கருதி பஞ்சாயத்தினுடைய அட்மினிஸ்டிரேஷனுக்கு திங்கும் அவமானமும் வரக்கூடியதாய் இருப்பதால் இது விஷயத்தில் இன்ஸ்பெக்டர் ஆப் லோக்கல் போர்டுக்கும் ஜில்லா கலக்டருக்கும் எழுதி வேண்டிய நடவடிக்கைகளை எடுத்து பரிகாரம் செய்ய வேணுமாய் தீர்மானிக்கப்பட்டது. மெம்பர் சொக்கலிங்க முதலியார் லோக்கல் டெலிவரி புஸ்தகத்தில் 4-வது பக்கத்தில் 39-வது வரியில் ஷெயாரின் கையெழுத்தையும் ஆபிஸ் நெம்பரையும் ரப்பரினால் அழித்து விட்டார் என்ற ஆபிஸ் பியூன் மனு யோசிக்கப்பட்டு, இதைப்பற்றி ஏன் பிராஸிகியூஷன் நடவடிக்கை செய்யக்கூடாதென்பதற்கு இது முதல் 15 நாளைக்குள் முகாந்திரம் காட்டும்படி நோட்டீஸ் கொடுப்பதற்கு தீர்மானிக்கப்பட்டது. இன்னும் பல விஷயங்கள் யோசிக்கப்பட்ட பிறகு கூட்டம் கலைந்தது.

புதுவயல், நவ. 29—

21-11-31-ந் தேதியன்று நேருச்சவுக்கத்தில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அதற்கு தோழர் பண்டித இரத்னம் தலைமைவகித்தார். தோழர்களான அரு. சுப்பையா, ப. ஜீவானந்தம், டி. கே கோவிந்தசாமி, எஸ். எம். சின்னையா, வினைதீர்த்தான், பழநியப்பன் முதலியவர்கள் காங்கிரஸ், நமது கடமை என்னும் விஷயம்பற்றி

(4-ம் பத்தி பார்க்க.)

## திரு. ராம்குமார் அல்லது சகஸ்ரமுகன்.

திரு. ராம்குமார் சிவார் என்பவர் தற்போது இந்தியாவிலிருக்கும் ஓர் பெரிய நடிகராவர். இவர் சாதாரண நடிகரைப்போலவன்றி எவருடைய வேஷத்தைப்போடுகின்றாரோ அதே மாதிரியாகக் காணப்படுவது ஓர் அபூர்வக்காட்சியாம். இதனை நவம்பர் 19ந்தேதி குமரன் மூலம் நேயர்கள் அறிந்துள்ளார்கள். இந்தவாரமும் முதல் பக்கத்திலும் பதினாறாம் பக்கத்திலும் அவர் நடித்த சில காட்சிகள் காண்பிக்கப்பட்டிருக்கின்றன. அதில் அவர் சரோஜனி தேவியாகவும், ஒரு துருக்கியாகவும், ஷைலாக்காகவும் வேஷம் போட்டிருப்பதைக்கண்டால் எந்த மனிதனும் பிரமிக்காமலே செய்வான். நமது நாடக மேடைகளில் ஸ்ரீராமனாகவும், லக்ஷ்மணனாகவும்பிற வேஷங்களிலும் வருபவர்களைப்பார்த்தால் எந்தப்பேர்வழி வேஷம்போட்டிருக்கின்றானென்பது கரதலாமலகம் போல் புலப்பட்டு விடும். மேலும் அரசனாக நடிப்பவன் தோட்டியைப் போலவும், செல்வந்தனாக நடிப்பவன் தரித்திரக் களஞ்சியமாகவும், ரதியாக நடிப்பவன் கருங்குரங்காகவும் இருப்பதும் கண்கூடு. அந்த நிலையில் திரு. ராம்குமாரை எடுத்துப்பார்த்தால் அவர் தற்கால நாடக உலகத்தாரின் மனோவாக்குக் காயங்களுக்கு மப்பாற்பட்டவரோ என்று தோன்றிவிடும். வருங்கால நாடகமேடைகள் இத்தகைய நடிகர்களையே பெற்றிலங்கவேண்டும். அப்போதுதான் அது நாடகம் என்று அழைக்கப்படும், நிற்க,

பேரும் புகழும்படைத்திருக்கின்ற திரு. எஸ். ராம்குமார் சிவார் மைசூரிலுள்ள ஓர் பிரபலகுடும்பத்தில் பிறந்தவராவர். இப்போது அவருக்கு வயது 23. சுமார் 14பாஷைகளைக்கற்றிருக்கின்றார். இவர் இங்கிலாந்து, அமெரிக்கா, ஜர்மனி முதலிய நாடுகட்குச் சென்று அங்குள்ள பிரபல நடிகர்களையடுத்து, நடிப்பதிலும் உருமாறிக்கொள்வதிலும் தேர்ச்சி பெற்றிருக்கின்றார். அவர் சென்ற நாடுகளில் பலரை பிரமிக்கச் செய்திருக்கின்றாரென்று தெரிகிறது. ஐரோப்பாவில் அவரை "லான்சானி" என்று அழைக்கின்றார்களாம். இந்தியப் பத்திரிகைகள் அவரை சகஸ்ர முகன் என்று கூறுகின்றன. ஜர்மன் பிரபல நடிகர் எமில் ஜானிங்ஸு போன்ற பலர் அவரைப் புகழ்ந்திருக்கின்றார்கள்.

திரு. ராம்குமார் தம் நடிப்பை பொருதொழிலாக வைத்துக் கொள்ளவில்லை; தமாஷுக்காக மட்டிலுமே நடித்துக் காட்டுகின்றார்.

இவரிடம் வேஷம் போடத்தகுந்த பல சாமான்களிருக்கின்றன. அவற்றில் பலதேசமக்களைப் போல் வேஷம் போடத்தகுந்த 20 மாதிரி பல்வரிசைகளிருக்கின்றதென்பது குறிப்பிடத் தகுந்தது.

அண்மையில் வட இந்தியாவில் சஞ்சாரம் செய்து பலவிடங்களில் நடித்தாராம். அவற்றில் சிலவற்றின் படங்களை நவம்பர் 19-ந் தேதிக் குமரனிலும் இப்பத்திரிகையிலும் காண்பிக்கப் பட்டிருக்கின்றன. கல்கத்தாவுக்குச்சென்றிருந்தபோது ஒரு மலையாளப் பெண்ணைப்போல் வேடந்தரித்து அங்கு பல பெண்களோடு சரிசமானமாக விருந்தாராம். ஒருவராவது அவர் பெண்ணன்றென்று சந்தேகிக்கவில்லையாம்.

இவர் நடிப்பதிலும் உருமாறுதலும் திறமை வாய்ந்திருப்பதுபோலவே, உயர்ந்த பல நல்ல குணங்களும் பெற்றிருக்கின்றாராம். இவருக்கு ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சியுண்டு. தமிழ், தெலுங்கு, மலையாளம், குஜராத்தி, கன்னடம் போன்ற பாஷைகளும் தெரியும். இவைகளெல்லாவற்றையும் அந்தந்த மொழியில் பிறந்தோர் எப்படி பேசுவார்களோ அப்படியே பேசுவார். இவருக்கு வடமொழியிலும் நன்கு பரிசயமுண்டு.

இவருடைய பேராவல், இந்தியருக்கு பிறநாட்டாரைவிட உருமாறுதல், நடித்தல் முதலிய விஷயங்களில் அதிக ஆற்றலுண்டு என்று காட்டவேண்டுமென்பதாகும். இவர் இன்னும் கொஞ்சநாளைக்குள் தனது ஆசையை நிறைவேற்றுவாரென்பதோடு பல இந்திய இளைஞர்கட்கு வழிகாட்டியாகவுமிருப்பார் என்பதில் சந்தேகமில்லை.

## புதுவயல்.

(1-ம் பத்தி தொடர்ச்சி.)

வெகு உருக்கமாகப் பேசினார்கள். பின் தலைவர் முடிவுரை கூற இரவு 9 மணிக்கு கூட்டம் கலைந்தது.

**கிராமப் பிரசாரம்:**—இப் பக்கத்தில் உள்ள சுமார் 40, 50 கிராமங்களில் காங்கிரஸ் கொள்கையை எடுத்து விளக்குவதற்காக கோட்டையூர் காங்கிரஸ் கமிட்டியிலிருந்து தோழர் ஜீவானந்தம், தோழர் பெத்தாச்சி செட்டியார் இவர்கள் தலைமையில் பலரும், புதுவயல், கண்டனூர் முதலிய ஊர்களிலிருந்து காங்கிரஸில் பற்றுள்ள பல வாலிபர்களும் ஆக சுமார் 40 வாலிபர்கள் சென்றிருக்கிறார்கள்.

இவர்கள் 22—11—31-ந் தேதியன்று சாக்கோட்டை சாக்க வயல், மணக்குடி, சுட்டிநெல்லிபட்டி முதலிய கிராமங்களில் பிரசாரம் செய்தனர். இன்னும் மற்ற கிராமங்களுக்கும் சென்றிருக்கின்றனர்,

## கணித ஜோதிடம்.

ஒரு வருஷத்திற்கு மாதவாரி பலன்கள் நுட்பமாயும் விவரமாயும் எழுதி அனுப்ப ரூபாய் இரண்டு. ஆருடம் 5 கேள்விகளுக்கு விவரமான பதில் எழுதி அனுப்ப ரூபாய் ஒன்று. விவாக விஷயம் ரூபாய் ஒன்று. விவாக விஷயத்தைப்பற்றி நாங்கள் எழுதி அனுப்புவதைக் கொண்டு பெண்ணுக்கு புருஷனும் புருஷனுக்குப் பெண்ணும் இன்னாரென்று வெகு சுலபமாய் நிச்சயிக்கலாம். ஜாதகத்தையாவது கடிதம் எழுதும் நேரத்தையாவது தெரிவியுங்கள்.

தே. ஆறுமுக செட்டி,
முதலியார்பேட்டை புதுச்சேரி

## தாதுபுஷ்டியில் மன்மதனுக்குலப்பாவீர்கள்.

நீங்கள் என்றுமழியாத இளமைப்பருவத்தை அடைய வேண்டுமோனல் பழனி, ஆர். எம். கே.

# தங்கபஸ்பம்

## நரசிங்க லேகியத்தில் சாப்பிடுங்கள்.

தாதுபுஷ்டிக்கு இதற்கு நிகரான மருந்து ஒன்றுமே இல்லை.

இது பிரபுக்கள் சாப்பிடவேண்டிய மருந்து. மற்றவர்கள் சாப்பிட்டு தாங்கமுடியாது.

ஒரே வேளையில் கொடுக்கும் பலனைப் பார்த்தால் உங்கள் மனதை அப்படியே கவரச்செய்துவிடுகிறது.

தாதுபுஷ்டியில் மன்மதனேவென மயங்குவார்கள்.

இதிலமைந்திருக்கும் ஓர் ரக்சியம் அபூர்வசக்தி உபயோகித்தவர்களுக்குத்தான் தெரியும்.

இதை காலை மாலை நோய் பலம்போல் 1 அல்லது 2 மண்டலம் உட்கொண்டால் வெகு சீக்கிரத்தில் தாதைக் கட்டி வீரியத்தையும் பலத்தையும் கொடுத்து இழந்துபோன ஆண்மைத்தனம் முழுமையும் திரும்பி வரும்படி செய்கிறது. இக்குணம் இதிலமைந்திருப்பது மகா ஆச்சரியமாயிருக்கிறது. இப்படியும் ஒரு மருந்துண்டாவென்று பிரமிக்கச்செய்கிறது. தாதைக்கட்டி இல்வாழ்க்கையில் இன்பத்தைக்கொடுத்து பால்யம், யௌவனம், விருத்தாப்பியம் இந்தப் பருவங்களில் அடையவேண்டிய காலத்திற்கு முன் அடைந்த விபரீதங்களை நிவர்த்தி செய்யும். கிழத்தனத்தை நீக்கி வல்லமை யடையச் செய்வதில்பேர்பெற்றது. நீரழிவு, பிளவை, குன்மம், காசம், க்ஷயம், ஈளை, இருமல்கஷ்டசுவாசம், கோளை, கபக்கட்டு, கிரந்தி முதலிய சகலவித கர்ம வியாதிகளும் தீரும். தளர்ந்துபோன நரம்புகளுக்கு முறுக்கேற்றும், வீரியத்தைக் கெட்டிப்படுத்தி ஆண்மைக் குறைவை நீக்கி தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்குமிஞ்சின ஔஷதமில்லை. 100-நாளைக்கு தங்கபஸ்பமும் நரசிங்க லேகியமும் ரூ. 100. 50 நாளைக்கு ரூபாய் 50. 25 நாளைக்கு ரூபாய் 25. சிங்கப்பூர் வாசிகள் சார்ஜு ரூபா 2-ம் சேர்த்து முன் பணம் அனுப்பவேண்டும்.

### நற்சாக்ஷி.

நான்உட்லேண்டு ஸ்டேஷன்மாஸ்டர் மூலமாய் தங்களிடமிருந்து நரசிங்க லேகியமும், தங்க பஸ்பமும் சாப்பிட்டதில் இப்போது புதிய பலம் அடைந்திருக்கிறேன்.

S. Jesudasan. Railway Overseer, Woodlands, Singapore

### புத்திரசந்தானம் உண்டாகிவிட்டது.

நற்சாக்ஷி :—எனக்கு விவாகம் நடந்து ஆறு வருடம் வரை புத்திர சந்தானமில்லாமலிருந்தது. தங்கள் தங்க பஸ்பமும் நரசிங்க லேகியமும் தருவித்து 25-நாட்கள் சாப்பிட்டதில் என் குறைகள் பூராவும் தீர்ந்து புத்திர சந்தானமுண்டாகிவிட்டது. இந்த உண்மையை உலகத்தாருக்கு எடுத்தோத முன்வந்திருக்கிறேன். இம்மருந்துகள் தத்வ ஔஷதங்கள் என்று சொல்லுவது மிகையாகாது. சரீர திடத்தையோ, புத்திக்கூர்மையையோ, மனமகிழ்ச்சியையோ, மேலாய புத்திரப்பேற்றையோ விரும்பும் ஒவ்வொருவரும் இம்மருந்துகளை வாங்கி சாப்பிட்டால் நினைத்தது லபிக்குமென்பதே எமது துணிபு. தாங்கள்ச்நீண்ட ஆயுளைப் பெற்று வாழ எல்லாம வல்ல பிரான் இன்னருள் புரிவாராக.

(Sd) நல்ல தம்பி, கட்டுப்பட்டை, சிலோன். 22—2—27.

### ஒரு அஸிஸ்டெண்ட் ஸர்ஜன்.

1—9—24-ல் கோலாசெலங்கூர் டிஸ்டிரிக்ட் ஹாஸ்பிட்டல் அஸிஸ்டெண்ட் ஸர்ஜன் நமது தங்க பஸ்பத்தைப்பற்றிப் புகழ்வதைக் கவனியுங்கள் :—அன்பார்ந்த வைத்திய ஆசிரியர் ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளை அவர்களுக்கு அதிக பக்தியுடன் எழுதுவது யாதெனில், தங்க பஸ்பமும், நரசிங்கலேகியமும் இரு நோயாளருக்கு 50-நாட்களுக்கு கொடுக்கப்பட்டது. இருவரும் தங்கள் குறைகள் நீங்கி சவுக்கியத்துடனிருக்கிறார்கள். தாங்கள் அருமையாகச்செய்த பஸ்பமும் லேகியமும் யாவராலும் கொண்டாடத்தக்கதே. இன்னும் 100-நாள் தங்க பஸ்பமும் சாலாமிசிரி அல்வாவும் ரூ. 50-க்கு வி. பி. செய்யவும்.

Nagalingam, Hospital C/o District Hospital Kuataselangore

# தாதுபுஷ்டிக்கு

## தங்க பஸ்பம் மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா.

இழந்துபோன ஆண்மையைத் திரும்பக்கொடுக்கும்

இல்லற வாழ்க்கையில் இன்பத்தைக் கொடுத்து

தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு

மிஞ்சின ஔஷதமில்லை.

மேகரோகம் கொடிய வியாதி இல்லாதவர்கள் தாதுபுஷ்டி சரீர திடம், அடைய தங்க பஸ்பத்தையும் அனுபானம் மகாமன்மத காமகேசரி அல்வாவில் சாப்பிடவும், கமகேசரி அல்வாவும் தங்க பஸ்பமும் 100-நாள் மருந்து ரூபாய் 50. 50-நாளைக்கு ரூபாய் 25. 25-நாளைக்கு ரூ. 12—8—0

## கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை.

தாதுபுஷ்டிக்கு இதற்கீடு ஒன்றுமில்லை,

பிரபுக்களுக்கு 100-குளிகை ரூ. 20. மற்றவர்களுக்கு 100-குளிகை ரூ. 10.

### ஒரு அஸிஸ்டெண்ட்ஸர்ஜன் புகழ்வதைக் கவனியுங்கள்.

தங்களின் அருமையும் பெருமையுமான தங்க பஸ்பமும் சாலாமிசிரி லேகியமும் எனது நோயாளி ஒருவருக்குக்கொடுத்தேன், அவரின் எத்தனையோ விதமான நோய்கள் பஞ்சுபோல் பறந்துபோய்விட்டது. இப்போது அவர் நல்ல திடதேகியாயிருக்கிறார். ஆகையால் அடியிற்கண்ட மருந்துகளை அனுப்பவும். தாம்பர பஸ்பம் 80-வேளை ரூ. 40. தாளிசபத்திரி சூரணம் 40-வேளை ரூ 5. நரசிங்க லேகியம் தங்கபஸ்பம் ரூ. 50. தபால் செலவு ரூ. 2. ஆக ரூ. 97-க்கு வி. பி. செய்யவும்.

19—1—25

மகா-ா-ா-ஸ்ரீ வைத்திய ஆசிரியரவர்களுக்கு, தங்கள் மருந்துகள் யாவும் நோயாளர் யாபேருக்கும் சுகத்தையும் மனத்திருப்தியையும் கொடுத்திருக்கின்றது. தங்கள் மருந்துகளின் அருமையையும் நான் அநேகருக்கு அனுபோக அத்தாக்ஷியுடன் எடுத்துக்காட்டியிருக்கிறேன். தங்கள் மருந்துகளுக்கு சர்டிபிகேட் தேவையில்லை. மருந்துகள் தாமே தங்கள் பெயரை எங்கும் விளங்கச் செய்கின்றது. ஆகையால் தாம்பர பஸ்பம், நரசிங்க லேகியம், பவள பஸ்பம், தங்க பஸ்பம் இவைகளை வி. பி. செய்யவும் (ரூ. 238-0-0-க்கு) வி. பி. பார்சலில் அனுப்பியிருக்கிறது.

P. Nagalingam C/o District Hospital,
Kualaselengore

### நற்சாக்ஷி :

புத்ரசந்தானம் உண்டாகிவிட்டது,

ஐயா, எனது நண்ப ளில் ஒருவர் ஆண் தத்துவம் சிறிதுமின்றி மனவருத்தத்துடனிருந்தார் உஅநேக வைத்தியர்களால் கொடுக்கப்பட்ட பல மேல்பூச்சு மருந்துகள் உபயோகித்தும், அநேக மருந்துகள் சாப்பிட்டும் கொஞ்சம்கூட குணமாகவில்லை. தங்கள் மேன்மை பொருந்தியதும் உயர்ந்த பலனைக் கொடுக்கக்கூடியதும், மதிக்கமுடியாததுமான தங்க பஸ்பம், மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா 50-நாள் மருந்தும், கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை 100-ம் தருவித்து 15-நாள் சாப்பிட்டதில் பெருமை பாராட்டத்தக்க புதிய சக்தியையும் 10 மடங்கு ஆண்மையையும் கொடுத்துவிட்டது. ஷை வியாதியஸ்தர் பூரா மருந்தையும் சாப்பிட்டதில் தனது இழந்துபோன ஆண்மைத்தனம் பூராவையும் பெற்றுவிட்டார். இப்பொழுது ஒரு ஆண் குழந்தையை அடைந்திருக்கிறார். தங்கள் ஞாபக சின்னமாக ஷை குழந்தைக்கு "வேலுசாமி" என்கிற தங்கள் நாமத்தையே சூட்டி அழைத்து வருகிறார்.

10-1-29 NATANAM, Sub-Inspector of Police,
South Arcot Dt

வைத்திய ஆசிரியர் :

## ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளை,

சித்த வைத்தியசாலை பழனி. S. I. RY.

தந்தி விலாசம்: 'வேலுசாமி' பழனி.

REG. NO.M. 1823.

16 PAGES.

# குமரன்

# THE 'KUMARAN' WEEKLY.

VOL. 9 | KARAIKUDI, THURSDAY, 3RD DECEMBER, 1931. | NO. 16

## திரு. ராம்குமார்.



ஒரு துருக்கியைப்போல் வேஷம் புனைந்திருக்கிறார்.



அவர், ஸ்ரீமதி சரோஜினியைப்போல் வேஷம் போட்டிருந்தபோது எடுக்கப்பட்ட படம்.
இந்த வேஷம் போட்டு முடிய 8 மணி 40 நிமிஷமாயிற்றாம். (14-ம் பக்கம் பார்க்க.)

Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press Karaikudi.

